# தமிழ்

# வரிவடிவ ஆராய்ச்சி.

இந்நூல் சிங்கப்பூர் பிரபல ஆயுர்வேத சித்த வைத்தியரும்,
"தாந்தரசம்" கம்பேனியின் சொந்தக்காரருமான

**அறிஞர், அ. சி. சுப்பையா,**

அவர்களால் எழுதப்பெற்றது.

---

வெளியிடுவோர்

பகுத்தறிவு நூற்பதிப்புக்கழகம் லிமிட்டெட்,

ஈரோடு.

# மதிப்புரை.

---

தமிழ் வரிவடிவ ஆராய்ச்சி.

(தோழர் ஈ. வெ. இராமசாமி அவர்கள் எழுதியது.)

தமிழ் வரிவடிவ ஆராய்ச்சி என்னும் நூல், சிங்கப்பூர் தோழர் அ சி. சுப்பையா அவர்களால் எழுதப்பட்டு பகுத்தறிவு நூற்பதிப்புக் கழக அமைச்சர் தோழர் அ. இராகவன் அவர்களது முன்னுரையுடன் பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டு நமது பார்வைக்கு வந்தது.

அப்புத்தகம் தமிழ் எழுத்துக்களின் வடிவங்களில் சில மாறுதல்கள் செய்யவேண்டும் என்கின்ற அபிப்பிராயத்தைவலியுறுத்தி எழுதப்பட்டதாகும். அதன் ஆசிரியர் தோழர் சுப்பையா அவர்கள் அதற்கு பல காரணங்களை ஆராய்ச்சி பூர்வமாகவும் அனுபவத்தில் பல அனுகூலம் ஏற்படுவதைக் குறிப்பிட்டும் எழுகி இருக்கிறார்.

இந்த அபிப்பிராயமானது வெகுகாலமாகவே அனேக தமிழ் அபிமானிகள் மனதில் ஊறிக்கிடந்தது என்பது மிகையாகாது.

ஆனபோதிலும் ஒரு பழமையானதும் முக்கியமானதுமான அபிபபிராயத்தை வெளியிட ஒவ்வொருவரும் தயங்கிக்கிடந்த சமயத்தில் நமது தோழர் சுப்பையா அவர்கள் தைரியமாய் வெளியிட்டிருப்பது பாராட்டத்தக்கதாகும். எனவே இப்புத்தகத்தை ஒவ்வொரு தமிழ் அபிமானியும், பாஷா அபிமானியும் வாங்கிப் படித்து நன்றாய் ஆராய்ந்து பார்த்து அனுபவத்திற்குக் கொண்டுவர வேண்டுமாய் விரும்புகிறோம்.

---

# பிரசுரிப்போர் முன்னுரை.

இந்நூல், சிங்கப்பூர் ஆயுர்வேத வைத்ய நிபுணரும், "காந்தரசம்" கம்பேனியின் சொந்தக்காரரும் அறிவியல் இயக்கத்தில் ஆழ்ந்த பற்றுமுடைய தோழர், அ. சி. சுப்பையா அவர்களால் 1933-ம் வருஷ ஆரம்பத்தில் சிங்கப்பூரிலிருந்து வெளிவந்த "முன்னேற்றம்" என்னும் வாரப் பத்திரிகையில் தொடர்ச்சியாய் எழுதிவந்த கட்டுரைகளின் தொகுப்பேயாகும்.

இந்நூலில் தமிழ் மொழி ஓர் காலத்திலிருந்து வந்த உன்னத ஒப்பற்ற நிலையையும் தற்காலத்தில் அது தாழ்ச்சியுற்று மீட்சியற்றுக் கிடக்கும் இழி நிலையையும் இனி அதை உன்னத நிலைக்குக்கொண்டுவர அதன் எழுத்துக்களில் செய்யவேண்டிய சீர்திருத்தம் ஈதெனவும் தெள்ளத்தெளிய விளக்கிக் காட்டியிருக்கிறது.

சில ஆண்டுகளாய் தமிழ் நாட்டில் ஓர் புத்தம்புதிய உணர்ச்சியும், கிளர்ச்சியுந் தோன்றி வருகின்றது அதன் பலனாய், யாண்டும் தமிழன், தமிழ்க்கலை, தமிழ் மருத்துவம், தமிழர் நாகரீகம், தமிழ்ச்சங்கீதம் என்றெல்லாம் பேசப்படுகின்றன. இத்தகைய உணர்ச்சியால் இந்நாட்டிலுள்ள சீர்திருத்த வேட்கை மிக்க அறிவியல்வாதிகளும் உந்தப்பட்டு, தமிழ் மொழியின் முன்னேற்றத்தில் அதிக அக்கரை கொண்டுள்ளார்கள். தமிழ் மொழி முன்னேற்றம் பெறவேண்டுமாயின் அதன் எழுத்துக்களில் பல மாற்றங்கள் செய்யவேண்டுமென முனைந்துள்ளனர்.

இவ்வெண்ணம் சுமார் 4, 5, ஆண்டுகளாய் இவர்கள் உள்ளத்திற்கொழுந்துவிட்டெரிவதை யாம் கன்கறிவோம். ஆனால் 1931-ல் காரைக்குடியினின்று வெளி வரும் "குமரன்" என்னும் வார வெளியீட்டில் இரத்தினம் என்பவரால் எழுத்துத் திருத்தங்களைப் பற்றி ஓர் கட்டுரை வெளியிடப்பட்டது. அதை ஆதரித்து "அஞ்சாநெஞ்சன்" என்னும் புனைப்பெயருடன் அறிஞர் ஒருவரால ஓர் கட்டுரை அதே பத்திரிகையில் எழுதப்பட்டிருந்தது. அவைகளை இப்புத்தகத்தின் இறுதியில் வெளியிட்டிருக்கிறோம். அதைப்பற்றி குமரன் ஆசிரியர், குறிப்பொன்று எழுதியதோடு தமது பத்திரிகையின் 3-ம் பக்கத்தில் அதிற் குறிப்பிட்ட எழுத்துத் திருத்தங்களுடன் கட்டுரைகள் வெளியிட்டுவந்தார். பின்னர் எக்காரணத்தாலோ எழுத்து மாற்றங்களைப் பற்றி கவனியாது கைவிடப்பட்டன. அதன் பின்னரே முன்னேற்றத்தில் இந்நூல் கட்டுரை ரூபமாய் வெளியிடப்பட்டுக் கிளர்ச்சி செய்யப்பெற்று அக்கிளர்ச்சியும் தளர்ச்சியுற்றது.

பின்னர் 1934-ல் சுயமரியாதை இயக்க நிறுவியார் தோழர் ஈ. வெ. ராமசாமி அவர்கள் சிறைக்கோட்டம் கண்ணினர். சிறையில் வதிந்தபோழுது தமிழ் எழுத்தில் செய்வேண்டிய சீர்திருத்தங்களைப்பற்றி ஆலோசனை செய்துகொண்டு வந்து, சிறையினின்று வந்ததும் என்னிடம் அவரது அபிப்பிராயங்களைக் கூறினார் நானதைக் கேட்டு மகிழ்ச்சியடைந்ததோடு உயிரெழுத்துக்களில்கூட சிலமாற்றங்கன் செய்வேண்டுமென்றும், உயிர்மெய்யெழுத்தென்றால் "அந்த உயிர்மெய்யெழுத்தில்" உயிரெழுத்தும், மெய்யெழுத்துமாக இரண்டெழுத்தும் தனித்தனியாயிருக்கவேண்டுமென்றும், அத்தகைய மாறுதலோடு 'ஐ'கார

வரிசையும், "ஔ" கார வரிசைகளையும் எடுத்து விடலா மென்றும், அவ்வாறு செய்துவிட்டால் தமிலெழுத்துக்க ளை சுமார் 30எழுத்துக்களுக்குள்ளாகக்குறைத்துவிடலா மென்றும் கூறினேன். இத்தகைய சீர்திருத்தங்கள் அவ சியந்தான் என்றும் ஆனால் திடீரென்று இத்தகைய சீர் திருத்தங்களைச்செய்து பொதுமக்களை அனுஷ்டிக்கும் படி செய்வது கஷ்டமென்றும், ஆனால் ணா, றா, லை, ளை, னை, ணை, ணோ, றோ, னோ என்ற எழுத்துக்களை மாற்றி முறையே னா, றா, லை, ளை, னை, ணை, ணோ, றோ, னோ என்று சீர்திருத்தி அவ்வாறு நமது புத்தகங்களி லும், பத்திரிகைகளிலும் வெளியிடுவோம். பொது மக்க ளுக்கு இதிலொன்றும் கஷ்டமில்லை. தமிழ்எழுத்துக்கள் பயிலும் மாணாக்கர்கள் எழுதச்சுலபமாய்க்கற்றுக்கொள் வர். அச்சுக்கோர்ப்பதற்கு எழுத்துக்கேசுகள் (அறைகள்) பல குறையும். அச்சுக் கோர்ப்பவர்களுக்கு வேலை சுல பம். டைப்ரைற்றர் செய்தரல் இயந்திரத்தின் அகலம் குறைவதோடு பல எழுத்துகளும் குறையும். ஆனால் தாங் கள் கூறும் பூரணத்திருத்தங்களைப்பற்றிபின்னர், ஓர்புல வர்கள் மகாநாடு கூட்டுவித்து அதிலாலோசனை செய்து அரசாங்க ஆதரவின்பேரில், பாடப்புத்தகங்களில் அம் மாற்றங்களை செய்துவிட்டால் ஜனங்களிடம் பரவுவது எளிது. ஆனால் இப்பொழுது நான் விரும்பும் மாற்றங் களை விரைவில் குடி அரசில் எழுதி அதை நாமே அனு ஷ்டானத்தில் செய்து காட்டுவோம் என்றார். அவ்வா றே, 20—1—35.ல் குடி அரசில் ஓர் குறிப்பு எழுதினார். அக்குறிப்புரை இப்புத்தகத்தின் இறுதியில் சேர்க்கப் பட்டிருக்கிறது. அதுமுதல் தனது பத்திரிகைகளிலும், புத்தகங்களிலும், பகுத்தறிவு நூற்பதிப்புக்கழகப் புத்

தகங்களிலும் தனது எழுத்துத் திருத்தங்களை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவந்தார். தனது கொள்கையை ஆதரிக்கும் பத்திரிகைகளையும் இவ்வெழுத்துச்சீர்திருத்தத்தை ஆதரிக்குமாறு கேட்டுக்கொண்டிருக்கிறார்.

தமிழ் எழுத்தில் பல சீர்திருத்தங்கள் செய்யவேண்டுமென 1934-ல் சென்னையிற் கூடிய தமிழன்பர் மகாநாட்டில் ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பின்னர் அது கவனிப்பாரின்றி நழுவவிடப்பட்டிருக்கிறது. பல தமிழறிஞர்கள், முதியோர்கள் இளமை தொட்டு இன்றுவரை நமதுசீர்திருத்தப்படி எழுதிவருவதோடிது புதிதன்று; பண்டைக்காலத்தில் இருந்த வரிவடிவத்தின்படியேதான் இருக்கிறது என்று கூட இன்று கூறிவருகின்றார்கள். நான் கலந்துபேசிய தமிழ் பண்டிதர்கள் பலர் இதற்கு ஆதரவு காட்டி வருகின்றார்கள்.

எனவே இந்நூலின் மூலம் பொதுவாய்த் தமிழர்களுடையவும், சிறப்பாய் தமிழ்ப்பண்டிதர்களுடையவும் அபிப்பிராயங்கள் ஈதென எளிதிலறிந்து இதில் கூறப்பட்ட எழுத்து சீர்திருத்தங்களோடு மட்டுமல்ல—இன்னும் தமிழ் எழுத்துக்களில் எவ்வளவு மாற்றங்கள் செய்யலாம் என்றும் அறிந்துகொள்ளவே, இந்நூலை வெளியிடத் துணிந்தோம்.

ஆகையால் இந்நூலை எல்லோரும் வாங்கி ஆதரிப்பது தமிழ் மொழி முன்னேற்றம் பெற வரி வடிவத்

தில் சில திருத்தங்கள் செய்வதற்கும் தமிழ்மொழியை அபிவிருத்தி செய்யவும் எகங்ட்கு ஊக்கமளிப்பதாகும்.

அ. இராகவன்,
அமைச்சர்,
பகுத்தறிவு நூற்பதிப்புக்கழகம், லிமிட்டேட்.

ஈரோடு,
1—8—35.

# தமிழ்

# வரிவடிவ ஆராய்ச்சி.

———)o(———

மக்கள் தோன்றிய காலமுதல் தொன்றுதொட்டு வழங்கிவரும் நம் தமிழ் மொழியானது ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்னரே மிகநுண்ணிய இலக்கண இலக்கியங்களுடையதாய் தமிழரசர்களான சேர, சோழ, பாண்டியன் காலம் முதல்—இடை—கடையென்னும் முச்சங்கத்திலும நிலவிற்றென்பதை சங்க நூல்கள் சான்று பகரும். கடைச்சங்கத்திற்குப் பின் பௌத்த மதஅரசு உரம்பெற்று வந்த காலத்தில் பாண்டிய வம்சம் வேற்றரசுக் குட்பட்டதினால் சங்க நூற்களைப்படிப்போரும் படித்தவர்களை யாதரிப்போரும் நாளுக்குநாள் குறையலாயினர்.

ஒரு காலத்தில் திருவேங்கடத்திற்கு வடக்கேயும், கன்னியாகுமரிக்குத் தெற்கேயும் பரவியிருந்த நம் தமிழகமானது இடைக்காலத்தில் மேற்சொன்ன இரண்டெல்லைக்கும் உட்பட்டதாயிருந்து பிற்காலத்தில்வரவர அவ்வெல்லையினும் சுருங்கி விட்டது. கன்னியாகுமரிக்குத் தெற்கேயிருந்த நிலத்தை கடல்கொண்டு விட்டதினால் அது காரணமாக பல அரிய நூற்கள் பட்டழிந்தனவென்பாருமுளர். திருவேங்கடத்திற்கு வடக்கிலுள்ள நிலங்களை ஆரிய மொழிகளும் அதற்கு தென்மேற்கிலும் தெற்கிலும் உள்ள சில இடங்களை தெலுங்கு, மலையா

ளம், முதலிய சில மொழிகளும் கைப்பற்றி விட்டன. பாண்டியர்கள் காலத்திற்குப்பின்னும் ஆங்கிலேயர் காலத்திற்கு முன்னும் பெரும்பாலும் அரசாட்சி சீர்கேடடைந்திருந்ததால் அவ்வரசர்களிற் சிலர் தமிழ்நூல்களை ஆதரிக்காததோடு அவற்றை நெருப்பிலும் நீரிலும் எரிந்து சேதப்படுத்தினார்கள். இதனால் பல அரிய நூற்கள் இருந்தவிடம் தெரியாது இறந்துபட்டன. தமிழ்நாடு மொகலாய சக்ரவர்த்திகளாகிய அன்னியர் ஆட்சிக்குள்பட்ட நாள்முதல் அன்னிய மொழி தலையெடுக்கவும் தமிழ்மொழி மெலிவடையவும் தலைப்பட்டது என்பது சரித்திரச்சான்று.

ஆதிகாலத்தில் பிறமொழி எட்டுணையும் கலப்பிடமில்லாது தனி மொழியாய் வழங்கி வந்த தமிழ் மொழியில் வடமொழிப்பதங்களும் எழுத்துக்களும் சிறிது சிறிதாக அதிகரித்தன. பாரதம்பாடிய வில்லிபுத்தூரார் காலத்திற்குப் பின்னர் வடமொழிப் பதங்கள் மிகவும் அதிகமாகக்கலந்து விட்டன. தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம், உருது முதலிய வேறு மொழிச் சொற்களும் கலந்தன. ஆங்கில அரசாட்சிக்குப் பின் ஆங்கிலச் சொற்களும் தற்போது சில மலாய்ச்சொற்களும் கலந்து உறவாடுகின்றன. இதனால் தமிழ் தனி மொழியோ என்னும் சந்தேகமும் பலருக்கு உண்டாகி விட்டது.

சங்க காலத்தில் தமிழ் மொழி இயல், இசை, நாடகம் என மூன்று பாகுபாடுகளுடன் வழங்கி வந்ததினால் அது "முத்தமிழ்" எனப்பெயர் பெற்று இருந்தது. கால வேற்றுமையாலே பிற்காலத்தில் இசைத்தமிழ்,

காடகத்தமிழ் என்று இரண்டின் கண்களும் மறைந்து விட்டன. சில இசைத்தமிழ் நூற்களின் பெயர்கள் மட்டும் பழைய நூலுரைகளில் காணப்படுகின்றனவேயன்றி வெளிவந்துலாவுதல் அரிதாகப்போய் விட்டது. இயற்றமிழ் நூற்களிலும் பெயர் மாத்திரம் தெரிந்து வெளிப்படாதிருக்கும் நூல்களும் பலவுள அவைகளில் பெருங்குருகு, பெருநாரை, இசை நுணுக்கள் கணித நூல்கள் தமிழ்மொழிக்கு தனியாகவிருந்தனவென்பதை இப்போதுள்ள தமிழ்க்கணக்கு முறையே வெளிப்படுத்தும். இம்மி, கீழ் முந்திரி, முந்திரி, காணி, அரை காணி முதலிய மிக மிக நுட்பமான சிற்றெண்களெல்லாம் நம் தமிழ் மொழிக்கே உரித்தானவைகளாகும். இன்னும், இலக்கம், நெல்லிலக்கம், எண்சுவடி கிழ்வாயிலக்கம், குழி மாற்று முதலிய நூல்களும் பிறவுமாகும். ஆங்கில எண்கள் வழக்கத்திற்கு வந்துவிட்டபடியால் மேற்சொல்லிய தமிழ் இலக்கங்களுக்கு வேலையில்லாமல் போய்விட்டது. தமிழின் வீழ்ச்சிக்கு அன்னியமொழி தலையெடுப்பும், நம்மவர்க்குள்ள மொழிப்பற்று இன்மையுமே காரணமாகுமென்பதுமிகையாது.

ஒரு நாட்டை ஒரு சாதியார் ஆளும்பொழுது அவர்கட்குரிய மொழியே தலையெடுப்பது இயற்கை. ஆயினும் நம் தாய்நாடு ஆங்கில அரசாட்சிக்குட்பட்ட பிறகு அதற்கு முன்னிருந்த தீமைகளெல்லாம் நீங்கிச் சனங்களுக்குள் கல்வியும் சமாதானமும் நிலைபெற்று வருகிறதெனினும் அரசாங்க மொழியாகிய ஆங்கிலத்திற்குள்ள ஏற்றம், நம் தமிழ் மொழிக்கு ஏற்படவில்லை. ஆங்கிலம் கற்றால் உத்தியோகம் வியாபாரம் முதலிய வழிகளில் ஊதியம் மிக்க வருகிறதென்று அதனைப் பெரும்

பாலார் விரும்பிக் கற்கின்றனர். அவர்கள் விரும்பிய பய னையும் அடைகின்றனர் என்றாலும் தற்காலம் ஆங்கி லத்தில் (பி. ஏ., எம். ஏ.,) பட்டங்கள் பெற்ற பட்ட தாரிகள் 20, 30-ரூபாய் சம்பளத்திற்குக் கூட வகையில் லாது, போலீஸ் சேவகர் வேலையும் கிடையாது திண் டாடிக்கொண்டு திரிகிறார்கள். ஏதோ தற்காலத்திலி ருக்கும்—நமது "காருண்யம் பொருந்திய அரசாங்கத்தா ரும்" அவர்களுக்கு முன் அரசாண்ட மன்னர்களைப் போல் தேச பாசையை அனாதரவு செய்யாது பள்ளிக் கூடங்களில் ஆங்கிலத்தோடு தமிழ்மொழியையும் கற் பித்துவருவதாலும் ஆங்காங்கு இலைமறை காய்போல் சில தமிழபிமானிகள் இருப்பதாலும் நம் தமிழ்மொழி இவ்வளவேனும் உயிருடன் இருந்து வருகின்றதென்ன லாம்.

வங்காளிகளுக்கிருப்பதுபோல நம் தமிழ் மக்களி டத்தில் மொழிப்பற்று இல்லையென்பது மிகையாகாது. அவர்கள் ஆங்கிலம் எவ்வளவு கற்றிருந்தாலும் தமக்கு ரிய தாய்மொழியை அனாதரவு செய்யமாட்டார்கள். நம் மக்கள் பெரும்பாலும் ஆங்கிலம் கற்றுவிட்டால் நம் தாய் மொழியைப் பேசுவது கூட கௌரவக்குறைவாக எண் ணுகிறார்கள். இவர்கள் கெதி இப்படியானால் படிக் காத பாமரர்களைப்பற்றி சொல்லவும் வேண்டுமா?

இனி தமிழ்க்கல்வி முற்காலத்தில் பயின்ற முறை யையும், இக்காலத்தில் பயலுமுறையையும் சற்று கவனித் துப் பார்ப்போமானால் முற்காலத்தில் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை "குருகுலம்" என்று சொல்லக் கூடிய ஆச்சிரமத்தில் இலக்கணவமைதி வாய்க்கப்பெற்ற

ஒழுக்க சீலராயுள்ள நல்லாசிரியரிடத்தில் இயற்கையோடு கூடிய கல்வியைப் பயில அனுப்பி வந்தார்கள். ஆசிரியரும் "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்பதற்கிணங்க எண்ணுக்கு நெடுங்கணக்கும் எழுத்துக்கு இலக்கணமுமாகத் தொடங்கி அரிச்சுவடிக்குப்பின் இரண்டெழுத்துப் பெயர், மூன்றெழுத்துப் பெயர், நான்கெழுத்துப் பெயர் முதலிய பல சொற்களையுஞ் சொல்லிக்கொடுத்து ஒவ்வொரு நாளும் போதிப்பதை பனை ஓலையில் சட்டம் எழுதச்சொல்லியும், இவற்றைப் பயின்றபின் பிரவாச் சுவடி, ஆத்திச்சுவடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை, மூதுரை, முதுமொழிக்காஞ்சி, முதலிய நூல்களையும் முறையே பயிற்றுவித்துப்பின்னர் மற்றுமுள்ள இலக்கியம் நிகண்டு, இலக்கணம் முதலியவற்றையும் இவ்வாறே கணக்குகளையும் முறையாகப் பயிற்றுவித்து வந்தார்கள். நூல்களை மனப்பாடம் செய்வது பெரும்பயனைத்தருமாதலால் அதற்கேற்ப செய்யுள் ரூபமாகவே முற்காலத்து நூல்களெல்லாம் செய்யப்பட்டன. இலக்கம், நெல்லிலக்கம், எண்சுவடி முதலிய கணித நூல்களையும் செய்யுள் ரூபமாகவே அமைக்கலாயினர். பிற்காலத்தில் தமிழுக்கு பெருமை குறையக் குறைய இதனைப் படிப்போரும் குறையலாயினர்.

முறையான படிப்புக் குறையவே, சரியான ஆசிரியர்கள் கிடைப்பதும் அருமையாயிற்று. ஆயினும் அறிவு விருத்திக்குக் கல்வி இன்றியமையாததாகவிருந்ததால் ஒவ்வொரு ஊராரும் அவ்வூரிலுள்ளவர்களில் சிறிது நன்றாய்ப்படித்தவர்களைக் கொண்டு சிறுவர்களுக்குக் கல்வி பயிற்றுவித்து வந்தனர். கொஞ்சக்காலத்திற்குமுன்வரையிலும் அச்சுப்புத்தகம் ஏற்படாமையால்

அரிவரிச்சுவடி முதல், நன்னூல், நிகண்டு வரையில் உள்ள எல்லாப்பாட புத்தகங்களையும் உபாத்தியாயர் ஏட்டில் எழுதிக்கொடுத்தே படிப்பிக்க வேண்டியதிருந்தது.

பழைய ஏட்டுச்சுவடிகளில் மெய்யெழுத்துக்குப்புள்ளியும், உயிர்மெய் "எ" கார "ஒ" காரங்களுக்கு கொம்பு சுழித்தலும், "ர"கரத்துக்குக் கீழே இழுத்தலும் "லை", 'ளை" "னை" "ணை" "ணு" "ணு" "ரு" முதலிய எழுத்துக்களுக்கு மேலே சுழித்தலும், கீழேயிழுத்தலும். காணப்படாமையால் சில அரைகுறையாகப் படித்தவர்கள் தங்கள் சௌகரியத்தை உத்தேசித்தும் அர்த்த ஞானமில்லாமலும் மாணவர்களுக்கு எழுதிக்கொடுத்தும் போதிக்கத்தொடங்கவே "எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக்கெடுத்தான்." என்னும் பழமொழிக்கிணங்க எழுதிய ஏடுகளும் பாடிய பாட்டுக்களும் பிழைபடலாயின. சொற்களெல்லாம்ரகர, றகர, ழகர, ளகர முதலியவற்றின் பேதங்களின்றி எழுதவோ படிக்கவோ முடியாமற் போயின. உதாரணமாக தமிழ் நெடுங் கணக்கிற்கு "அரிச்சுவடி" எனப்பெயர் கொடுத்திருந்தார்கள். ஏனெனில், அரி=ஒளி அல்லது பிரகாசம். சுவடி=ஏடு— அதாவது மடமை என்னும் இருளை நீக்கி அறிவையும் பிரகாசத்தையும் தரவல்லதாதலால் அதற்கு அப்பெயரைக் கொடுத்தார்கள். இடைக் காலத்தில் சைவ சமயத்திற்கு போட்டியாக வைணவ சமயம் தலை தூக்க ஆரம்பித்தவுடன் கிராமங்களிலுள்ள பள்ளிக்கூடங்களெல்லாம் "அரி வரிச்சுவடி" க்கு காப்பாக வைணவ பக்தர்கள் "ஹரிநமோஸ்து சிந்தம்" என- அதாவது ஹரியாகிய விட்ணுவை சித்தத்தில் வைத்து வணங்குகின்றேன் என்பதாம். இரணியன்மகன் பிரக

லாதனுக்கு இரணிய நமோவென்பதை மறுத்து 'ஹரிந மோ' எனச்சொல்லும்படி செய்த புராணக்கூற்றும் இதற்குச் சான்றாகு மன்றோ? அத்தன்மைபோல் இடைக் காலத்து கணக்காயரும் (உபாத்தியாயரும்) அக்காப்பை பிள்ளைகள் எளிதில் சொல்லமுடியாமையைக் கண்டு அச்சுலோகத்தை, தனித் தனி எழுத்துக்களாக ஹரி (அரி) ந. மொ த். து. சி. ந். த. ம். எனப்போதிக்க ஆரம்பித்து விட்டார்கள். அந்தப்படியே திண்ணைப் பள்ளிக்கூடங்களிலும், கிராமப்பள்ளிக் கூடங்களிலும், இன்று வரை போதிக்கப்பட்டு வருகிறது.

அதன் பிறகுசில சீர்திருத்தவாதிகளும், அறிஞர்களும் முற்பட்டு "அகர முதலெழுத்தெல்லாய் ஆதி பகவன் முதற்றே உலகு" என்ற பொய்யாமொழிப் புலவரின் திருவாக்குக்கிணங்க சர்க்கார் பள்ளிக்கூடங்களில், பழந் தமிழர் காலத்தில் வழங்கி வந்ததுபோல் அகரவழுத்தை ஆதியாகக் கொண்டு நெடுங்கணக்கை பிள்ளைகளுக்குக் கற்பிக்க போந்தது மிகவும் போற்றத்தக்கதாகும். எனினும் நெடுங்கணக்கிலுள்ள ஐந்து குற்றெழுத்தில் இகரம் நீங்கலாக மற்றைய நான்கும் நெட்டெழுத்துக்கு வரிவடையாளத்தில் இனம்பற்றி நிற்க இந்த நெட்டெழுத்து மாத்திரம் உருவத்தில் (ஈ)வேறுபட்டிருப்பது முற்றிலும் பொருத்தமுடையதன்று என்பதை அறிஞர்கள் ஒத்துக் கொள்ளக் கூடியதேயாகும். திருவாளர் கா. நமச்சிவாய முதலியார் அவர்களும் தாம் எழுதிய பாட புத்தகத்தில் இகரத்திற்கும் ஈகாரத்திற்கும் உள்ள வேற்றுமையைப் பற்றி குறிப்புரை ஒன்று எழுதியிருப்பதுடன் அவர்களால் எழுதப்பட்ட துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப் பட்ட பாலர் பாடங்களிலும் இ காரத்தை மேற்குழித்து

(இ) எழுதியிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். என்றாலும் பின்னர் எழுதிய பாடப் புத்தகங்களிலெல்லாம்இகாரத்தை பழய வடிவத்திலேயே எழுதியிருப்பது மிகவும் வருந்தத் தக்கதேயாகுமன்றோ?

நெடுங்கணக்கிலுள்ள மற்றொரு குறைபாடு என்னவெனில் ககர முதல் னகர யீராவுள்ள மெய்யெழுத்து பதினெட்டுக்கும் "ண" "ற" "ன" இம்மூன்றெழுத்தும் நீங்கலாக மற்றையப் பதினைந்தும்நெடில் குறியை உணர்த்த (ா) கால்பற்றி நிற்க மேல் காட்டிய மூன்றெழுத்து மாத்திரம் உருவத்தில் வேறுபட்டு நெடில்குறியை உணர்த்த "ணா" "றா" "னா" கீழ் சுழி பற்றி வருவது பொருத்தமுடையனவல்லவென்பதை அறிஞர்கள் கருதற்பாலதாகும். எனைய எழுத்துக்களைப் போல மேல் காட்டிய மூன்றெழுத்துக்களும் நெடில் குறியை உணர்த்த கால் பற்றி (ா) வருமாகில் பதினெட்டு மெய்யெழுத்துக்களும் ஒரே இனம் பற்றி நிற்பது உம் எவ்வளவு பொருத்முடையனவாக இருக்கும் என்பதையும் அறிஞர்கள் சிந்திக்கற்பாலதாகும்.

இன்னும் நெடுங்கணக்கிலுள்ள மற்றொரு குறைபாட்டையும் இங்கு எடுத்துக் காட்டவேண்டியதாக இருக்கின்றது. ஐகாரத்தில் "கை" "ஙை" முதலிய பதினான்கு எழுத்துக்களும் ஐகாரக் குறி (ை) பற்றி வருவதும் "ணை" "லை" "ளை" "னை" முதலிய நான்கெழுத்துகள் மாத்திரம் வரி வடிவில் வித்தியாசப்பட்டு மேற்சுழி பற்றி வேற்றுமையடைந்திருப்பதையும் "கௌ" முதல் "னௌ" ஈராகவுள்ள 18 எழுத்துகளும், "கை" முதல் "னை" ஈராகவுள்ள 18 எழுத்துகளும் நெடுங்கணக்கில் இருக்கவேண்டுமென்கிற அவசியமில்லையென்றே புல

னாகும். ஏனெனில், கௌவுக்குப் பதிலாக கவ் என்றும், கை''க்குப் பதிலாக கய் என்றும் முறையே எழுதுவதினால் தமிழ் எழுத்தின் உயர்வு சிறிதும் குன்றிவிடாதென்பதே எமதபிப்பிராயமாகும். ஆனால் உச்சரிப்பின் தன்மை சிறிதுமாறுபடலாம் எனசிலர்கருதக்கூடுமெனினும், அத்தகையாளருக்கு நாம் சொல்லும் சமாதானம் என்னவெனில், ஆங்கில பாஷையில்உள்ள 26-எழுத்தைக் கொண்டு எப்படி உச்சரிக்கின்றார்கள் என்பதை நினைத்துப் பார்க்கும்படியாக கேட்டுக் கொள்ளுகின்றோம். ஆகையால் இதை தமிழபிமானிகளும் தமிழறிஞர்களும் சீர்திருத்தக்காரர்களும் கவனிக்கவேண்டியது அவர்களின் முக்கிய கடமையாகும். ஏனெனில், எப்படி தனித் தமிழ் மொழியில் பிறமொழிகள் கலந்து தனித் தமிழ்மொழி ஒன்று உண்டோ என்னும் சந்தேகம் தற்காலத்தில் பல தமிழ் மக்களிடத்திலும் சிலபண்டிதர்களிடத்திலும் உண்டாக்கிவிட்டதோ, அதேபோல் வரி வடிவத்திலும், நாளாவட்டத்தில் தமிழ் எழுத்துக்களின் உருவமே சிதைவுபட்டுப் போய்விட்டதென்பதில் எட்டுணையும் ஐயமின்றாம்.

மேற்காட்டிய எழுத்துக்களின் வேற்றுமைகளைக் களைந்து பழைய உருவத்துடன் எழுத்துக்களைப் பதிப்பிக்க முற்படுவார்களாகின் ஒரேகாலத்தில் இலட்சக்கணக்கான பிரதிகளை அச்சிட்டுவரும் இபத்திரசாதனத்திற்கும் அச்சுக்கோர்க்கும் கோர்ப்பாளருக்கும் (கம்பாசிட்டர்களுக்கும்) சௌகரியமும் நேரக்குறைவும் ஏற்படுவதுடன், அச்செழுத்துக்களை வார்ப்பிடம் செய்பவர்

களுக்கும், இதனால் மிகுந்த நன்மையுண்டாகும். அது மாத்திரமன்று; ஆரம்பக் கல்விகற்கும் மாணவர்களுக்கும் பன்னிரண்டு உயிர் எழுத்தில் ஒன்று மாத்திரம் இனம் பற்றாது வேற்றுமையடைந்திருப்பதாலும், பதினெட்டு உயிர்மெய் எழுத்தில் மூன்று எழுத்துகள் உருமாறியிருப்பதிலிருந்தும், ஐகாரம் பதினெட்டெழுத்தில் நான்கெழுத்து மாத்திரம் மேற்சுழிபற்றி நிற்பதினாலும் பிள்ளைகளுக்கு மனக்கலக்கத்தையும், குழப்பத்தையும், விளைவிக்காமற் போகாது. ஆகையினால் இத்தகைய முரண்பாட்டையும் அவசியமில்லாமல் ஏற்பட்டிருக்கும் எழுத்துச் சிதைவுகளையும் நீக்கி தமிழின் தற்கால நிலமையை அறிஞர்களும், சீர்திருத்தக்காரர்களும் திருத்தியமைக்க முற்படுவார்களென்று நம்புகிறேன்.

மாறுதல் வேண்டாத சிலர் நம் தாய்மொழிவளர்ச்சிக்கு முட்டுக்கட்டைபோட்டு அதை அடியோடு மண்ணில் புதைக்கப்பார்க்கிறவர்களில் சிலர் "இரு மொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்" என்றும்.

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாய்த், தொடர்புடைய தென்மொழியையுலக மெலாந்தொழுதேத்தக், குடமுனிக்கு வலியுறுத்தார் கொல லேற்றுப்பாக ரெனிற், கடல்வரைப்பினிதன் பெருமை யாவரே கணித்தறிவார்" என்றும்.

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துடைக்கினுமோர், எல்லையறு பரம்பொருண் முன்னிருந்தபடியிருப்பது போற், கன்னடமுங் களிதெலுங்குங் கவின் மலையாளமுங், துளுவும், உன்னுதரத்துதித் தெழுந்தே

யொன்று பலவாயிடினும் ஆரியம் போலுலக வழக்கழிக் தொழிந்து சிதையாவுன், சீரிளமைத் திறம் வியந்து செயன் மறந்து வாழ்த்துவமே"

என்றும் சில செய்யுள்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு சரித்திர ஆராய்ச்சி சிறிது மில்லாது "ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக சிவபிரானால் உண்டாக்கப்பட்ட தெய்வத்தன்மை பொருந்திய தமிழ் மொழியை ஒருக்காலும் கூட்டவோ குறைக்கவோ முடியுமா?" என் தர்க்கவாதம் பண்ணுகிறீர்கள், "அந்தோ! சீர்திருத்தக்காரர்கள் தோன்றி நமது முன்னோர்களின் பெருமையைக்குறைக்க வந்திட்டார்களே" என்றும் ஓலமிடுவார்கள். "எழுத்துக்களை மாற்றுவது இலக்கண விதிக்கு முறண்பாடானது" என்று முறையிடுவார்கள். சங்க நூல்களைச் சான்று பகருவார்கள். தொல்காப்பியத்தைத் துணைகொள்வார்கள். கம்பன் கவிதையை வம்புக்கும் காட்டுவர். பெரிய புராணத்தைப் பேருக்குக்கொண்டுவருவார்கள். பவணந்தி முனியைப் பக்கத்திலிருத்துவார்கள். 'அகத்தியன் கண்ட அருந்தமிழை அணுவளவும் மாற்றமுடியாது' என்பார்கள். இவைகளுக்கெல்லாம் சீர்திருத்த அறிஞர்கள் செவி மடுத்துக்கொண்டிருந்தால் நமது தேசமும், நாமும் நம் தாய் மொழியும் முன்னேற்றமடைய முடியுமாவெனச் சிந்தித்துப்பாருங்கள்.

"பழயன கழிதலும், புதியனபுகுதலும் வழுவல கால வகையினானே."

நம் பழந்தமிழ் ஒலி வடிவாயிருந்த காலத்தும் அதன்பின் வரிவடிவாய் மாறிய காலத்தும் இருந்த வேற்றுமை உருவைப்பற்றி அடுத்த கட்டுரையில் ஆராய்வோம்.

ஆதியில் தமிழ் மொழி எவ்வாறு உண்டானது என்பதைப் பலரும் பலவிதக்கோட்பாடுகளுடனும் பல ஆதாரங்களுடனும் விளக்கியுள்ளார்கள். எனினும் அவற்றை நடுநிலைமை பிறழாது ஊன்றிக் கவனிப்போர்களுக்கு அவைசுருதி, யுக்தி, அனுபவம் மூன்றுக்கும் வேற்றுமைப்பட்டிருக்குமென்பதை சிற்சில உதாரணங்களால் இங்கு விளக்கிக் காட்டுதலும் பொருத்தமுடையதாகுமெனவே கருதுகின்றோம்.

நிலவுலகில் இன்று வரையில் அறிஞர்களாலும் ஆராய்ச்சி மிக்க வல்லுனர்களாலும் கண்டுபிடிக்கப் பட்ட பாஷைகள் ஆயிரத்துக்கு மேலாகும். இவற்றுள் மேன்மையும் நாகரீகமும் பொருள் வலியும் சுவைநலமும் பொருந்தியன மிகச்சிலவே. எனினும் இவற்றுள்ளும் பண்டுதொட்டே இப்பெருமைகளை உடைத்தனவாகவிருந்தது தமிழ், வடமொழி, ஹீப்ரு, லத்தீன், கிரேக் முதலிய ஐந்து மொழிகளே எனலாம். இவ்வைந்து மொழிகளிலும் தமிழ் மொழி ஒன்றே இன்றளவும் பேச்சு வழக்கில் நிற்பதைக் காண்கின்றோம். ஏனைய நான்கு மொழிகளும் உலக வழக்கொழிந்து பெரும்பான்மையும் ஏட்டுப்பாடமாய் நின்று விட்டன. எனவே தமிழ்மொழி ஒன்றே தனக்கிணையில்லாத ஓர் உயரிய நன்னயம் வாய்ந்த மொழியெனக்கூறுவது முற்றிலும் பொருத்தமுடையதாகும்.

"சிந்தாமணியின் நந்தாப் பெருமையும்
மணி மேகலையின் அணிகெழு போக்கும்
சிலப்பதிகாரத் திலக்கியச்செறிவும்
திருவள்ளுவரின் ஒரு மொழி நயமும்

கம்பன் கவியின் செம்பொருளின்பமும்
பத்துப் பாட்டின் வித்தக நடையும்
கல்லாடத்தின் எல்லாச் சிறப்பும்
இன்னோரன்ன பன்னூன் மாணபும்
பல்லூழி காலம் பாடு கிடப்பினும்
வருமோ மற்றோர் வாக்கின் வழித்தாய்''

என்பனபோல் இத்தகைய சீரும் சிறப்பும், சொன்னயமும் பொருணயமும் நடையழகும் வாய்க்கப்பெற்ற தமிழ் மொழியை நீத்து "அரசன் மெச்சியவள் அரம்பை" என்றாற்போல தோள் வலியும் பொருள் வலியும் மிக்குடையாரின் பாஷையையே நந்தமிழ் மக்களும் மிக்க ஆர்வத்துடன் கற்கலாயினர். இதைக்கண்ணுற்ற பிறமொழியாளரும் "தமிழ்மொழி கி. பி. 900ம் ஆண்டுகளுக்கு முன் இலக்கியம் என்பதை இன்னதென்றே அறியாதிருந்தது" என எளனம் செய்யலாயினர். "கொண்டவன் தூற்றினால் கண்டவனும் தூற்றுவான்". என்பதுபோல் தமிழ் மக்களே தமிழ் மொழியைத்தூற்ற ஆரம்பித்துவிட்டால் ஏனையோரைப்பற்றிச்சொல்லவும் வேண்டுமா? கால வேறுபாட்டாலும் கடைக்கணிப் போரில்லாமையாலும் நந்தமிழ்த்தாய் நூலிழந்த பார்ப்பன மங்கைபோல் உருமாறி அழகுகுன்றி தேனினும் இனியமொழிகள் கூளறுபட்டு தன்னிலும் எத்தனையோ மடங்கு கீழாயிருந்து பிச்சை வாங்கிப் பிழைக்கும் பிறமொழிப் பெண்களின் ஆதரவில் தாம் பிழைக்க முற்பட்டு விட்டாளென்றால் நமது கன்னித்தமிழரசிக்கேற்பட்ட துரதிர்ஷ்டந்தானென்னே? அந்தோ! அந்தோ!!

நாம் தமிழ் மொழி ஆராய்ச்சி செய்யும் முதற்கண், தமிழ் மக்கள் யாவர்? தமிழ் மொழி வழங்கியதும்

வழங்குவதுமாய எல்லைகள் யாவை? தமிழ் மொழியின் வரலாறென்ன? தமிழ் எழுத்துக்ளின் உற்பத்தி யாது? என்பன போன்ற வினாக்கள் இயல்பாகவே எழுகின்றன. இவற்றையெல்லாம் இன்னின்னவாறெனத் திட்டவட்டமாய்க் கூறுதற்கு இயலாதெனினும் நாம் எடுத்துக்கொண்ட தமிழ் எழுத்தின் உற்பத்தியைப்பற்றி மாத்திரம் ஆராய்ந்து பார்ப்பதே சாலச் சிறப்புடையதாகுமன்றோ?

நிலவுலகின்கண் மக்கள் தோன்றி மிருகப்பிராயத்தைக் கடந்து மனிதத் தன்மையை அடைய முற்பட்டவுடன் தங்கள் மனதில் தோன்றும் உணர்ச்சியை பிறரிடத்தில் தெரிவித்துக்கொள்ளவேண்டி "அ" "இ" "உ" வெனச் சத்தமிட்டு அழைக்கத் துவங்கினர். இதுவே மக்களுக்கு இயற்கையாயெழும் ஒலியாகும். எத்தேசத்தினராயிருந்தாலுஞ் சரி, அவர்கட்குப் பிறக்கும் பிள்ளைகள் பிறந்தவுடன், அ, இ, உ, எனச் சத்தமிட்டழுவதும் கண்கூடு. மக்கள் இறுதி காலத்தும் மரணத்தருவாயிலும் அ.இ. உ. எனச் சத்தமிட்டலறுவதும் போதிய சான்றாகும். இதுபற்றியே முதுகுரவர்களும் இலக்கணங் கண்ட காலத்து அ. இ. உ. மூன்றெழுத்தையும் சுட்டுப்பொருளாகத் தெரிந்தெடுத்தனர். அ. இ. உ. எனப் பிறந்த சப்தமே ஆதியில் தோன்றியபடியால் அதுவே "ஓம்" என்னும் பரப்பிரமத்தைக் குறிக்கும் எழுத்தாகுமென சைவசமய வைதீகர்களின் கோட்பாடாகயிருக்கின்றது. அது எவ்வாறாயினும் ஆகுக. மேல் குறிப்பிட்ட மூன்று எழுத்துக்களையும் வன்மைப் படுத்திக்கொண்டு பிறமொழிகளையும் கூற முற்பட்டனர். இங்ஙனம் பன்னூறு ஆண்டுகள் சென்றபின்னர்தான் தாங்கள்

கொண்ட எண்ணங்களை பிறருக்குத்தெளிவுபடுத்துவான் வேண்டி ஒவ்வொரு பொருளுக்கும் சித்திரம் வரைந்து காட்டலாயினர். இதற்குச் சான்றாக பல்லா யிர ஆண்டுகளுக்கு முன்னரே எகிப்து தேசத்து எழுத் துக்கள் பல உருவங்களாலாக்கப்பட்டனவாய்ச் சித்திரங் களைப்போல் வரையப்பட்டிருப்பதை இன்றும் லண்டன் பொருட்காக்ஷி சாலையில் பார்க்கலாம். சீனப் பாஷை யில் ஒவ்வோரெழுத்தும் ஒவ்வொரு கருத்தைக் குறிப் பதாய் இன்றளவும் பல்லாயிரம் எழுத்துக்களை உடைய தாகயிருப்பதே போதிய சான்றாகும். தமிழ் எழுத்துக்களின் ஆதிச்சரித்திரமும் மேற்கண்டவாறே யுள்ளது. அதற்குச்சான்றாகக் காட்டும் உரைகள் பல தமிழ்ப்பூர்வ இலக்கணங்களுக்குள்காணலாம். யாப்பருங் கல விர்த்தியில் தேர், பதி முதலிய நால்வகை எழுத்து உக்கிரவெழுத்து, முத்திரவெழுத்து, யோனி எழுத்து சங்கேதவெழுத்து முதலிய (Quoted in) செந்தமிழ் 5, 51 பலவித எழுத்துக்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

திவாகரம், பிங்கலந்தை முதலிய நூல்களில் "பெய ரெழுத்து, முடிவெழுத்து, வடிவெழுத்து, தன்மை எழு த்தென வெழுத்தின் பெயரியம்பினரே" என்பதினாலும்

"வடிவு பெயர் தன்மை யுண் முடிவு நான்காய்

நடைபெறு நாவலர் நாடிய வெழுத்தே" (இ-கொ)

என்பதினாலும் அறியக்கிடக்கின்றன. இவற்றுள் வடி வெழுத்தென்பன சித்திரக் குறிகளாலமைக்கப்பட்டன வாகும். அவை மனித உருவத்தையேனும், அல்லது அவனது அங்க உருப்பாகிய தலையையேனும் சித்திரித்

துக் காட்டுவதேயாகும். பெயரெழுத்தென்றது சந்தே கக்குறி. இது போருக்குத் தோள்வலியே வேண்டற் பாலதால் அதற்கடையாளமாக மனிதனின் தோளைச் சித்திரித்துக் காட்டுவதாகும். தனமை எழுத்தென்றது குணம், செயல் முதலியவற்றைக் காட்ட வரையும் அடை யாளங்கள். விவேகத்திற்குக் கண்ணையும், வெற்றிக்குக் கருடனையும் வரைந்து காட்டுதலுமுண்டு. முடிவெழுத் தென்பது வினை நிகழ்ச்சிகளை உணர்த்தும் வாக்கியங் களைக் குறிக்க வழங்கிய அறிகுறிகள் என்றார். செந் தமிழ் திங்கள் வெளியீட்டாசிரியராகிய, திருவாளர் இரா கவய்யங்காரவர்களும், மற்றொரு அறிஞராகிய, தமிழ் புலமை வாய்ந்த திருவாளர், F. J. ரிச்சாட்ஸ் பண்டித ரும், ஆதித் தமிழ் எழுத்து சித்திர உருவமாகவே உண் டாகியிருக்க வேண்டுமென்பதோடு நில்லாது அதற்குச் சான்றாக பல்லாரியில் மயில்மலையில் சித்திரித்திருக்கும் சில சித்திரங்களையும் படம்பிடித்து அச்சேற்றி வெளி யிட்டனர். (Mythic Society Journal Vol. VI No. 3) தற்காலம் வட இந்தியாவில் வழங்கும் வடமொழிக்கும், வடமொழியின் வழிமொழிக்கும் ஆதிமூலமாயிருந்தது பிராமி என்றழைக்கப்படும் "அசோக" எழுத்துக்களே யாகும். சமஸ்கிருத கிரந்த வெழுத்துக்களெல்லாம் இந் தப் பிராமிய எழுத்துக்களிலிருந்தே தெலுங்கு, கன்ன டம், மலையாளம் முதலிய எழுத்துக்கள் உண்டாயின வென்பதற்குச் சான்றாக வரிவடிவிலும், ஒலியிலும் இவையெல்லாம் ஒத்திருக்கின்றன. வரிசை முறையிலும் அப்படியே இருக்கின்றன.

இப்பொழுது வழங்கும் தமிழ் எழுத்துக்களிலும் பெரும்பாலானவை இந்தக் கிரந்த எழுத்துக்களின் திரி

பென்றும் ஆனால், ழ. ள. ற. ன. என்னும் இந்த நான்கு எழுத்துக்கள் மாத்திரம் ஆதித்தமிழ் வட்டெழுத்தைச் சேர்ந்தவையென்றும், சில அறிஞர்கள் அபிப்பிராயப்படு கிறார்கள். மேற்கூறிய பிறமொழிகளெல்லாம் ஆதிமுதல் வழங்கி வந்தனவும், வழங்கிவந்தனவற்றின் சிதைவுகளுமே இப்பொழுது வழங்குவனவாயிருக்க, ஆதித் தமிழ் எழுத்துக்களில் ழ. ள. ற. ன. முதலிய நான்கெழுத்துக்கள் நீங்கலாக பாக்கியுள்ள 212 எழுத்துக்களும் பிறமொழி எழுத்துக்களெனத் கூறுவது எவ்வகைத் தாலும் பொருத்தமுடையதன்று. தொல்காப்பிய காலத்திற்கு முற்பட்ட காலத்திலிருந்து கி. பி. 900, வரை தமிழ் நாட்டில் வழங்கிவந்த எழுத்துக்கள் வேறு. ஒன்பதாவது நூற்றாண்டின் பின் வழங்கிவரும் எழுத்துக்கள் வேறு. ஆதித் தமிழ் எழுத்துகள் வட்டெழுத்துக்களென வழங்கப்படும் தமிழ் மொழியின் வட்டெழுத்துக்களை அகற்றி அதில் சில சமஸ்கிருத எழுத்துக்களை புகுத்தினவர் பௌத்த மதஸ்தர்களும், ஆரியப்பார்ப்பனர்களும் என சில ஆராய்ச்சி வல்லுனர்கள் அபிப்பிராயப்படுகின்றனர்.

ஆதித் தமிழ் வட்டெழுத்துப் பயிற்சி வடநாட்டாரின் கூட்டுறவிற்கு முன்னமே தமிழ் மக்கள் எழுத்துப்பழக்கம் உடையராயிருந்தனரெனபதற்கு சில ஐரோப்பிய பண்டிதர்கள் வடமொழி தென்மொழியில் எழுதப்பட்ட நூலுரைகளின் காலம் நிர்ணயம் செய்தற்பொருட்டு இடைவிடாது செய்துவரும் பெரும் முயற்சிகளின் பயனாய் கிறிஸ்து பிறந்த நாள் துவங்கி இன்றுவரையில் எழுந்த நூலுரைகளின் காலம் ஒருவாறு துணியப்பட்டு வருகிறது. அதில் தமிழர்களின் பழைய நூற்களில்

ஒன்றாகிய தொல்காப்பியம் எழுதப்பட்ட காலம் இன்றைக்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதெனக் கொள்ளப்படுகின்றது. தொல்காப்பியம் பஃறுளியாறு கடல் கொள்ளப்படுமுன் எழுதப்பட்டதாகும். அக்காலத்தில் குமரியாறு தென்திசையில் ஓடிக்கொண்டிருந்தது. இது "வடவேங்கடந் தென்குமரி" என பனம்பாரனர் பாயிர உரையாலும் அதற்கு உரை எழுதிய இளம் பூரணர் முதலிய உரையாசிரியர் உரையாலும் நன்குணரப்படும். இவ்வாறுகளும் இவற்றைச் சூழ்ந்த நிலங்களும் கடல் கொள்ளப்பட்டதென்பது இன்றைக்கு நாலாயிரத்துமுந்நூறு வடங்களின் முன்னென்று இலங்கை பவுத்த வம்சாவளிப்பட்டியில் குறிக்கப்பட்டிருக்கிறது. இங்ஙனம் குறிக்கப்பட்ட காலமும், விவிலிய நூலில் குறிக்கப்பட்ட நோவா என்பவரின் ஜலப்பிரளய காலமும் மிகவும் ஒத்திருக்கின்றன. ஆகையால்தான் தொல்காப்பியனார் நாலாயிரத்து ஐ நூறு வருடங்களுக்கு முற்பட்டவரெனத் துணியப்படுகின்றது.

இனி இத்துணைப் பழய காலத்தே எழுதப்பட்ட தொல்காப்பியமெனும் தமிழ்க்களஞ்சியத்தில் தொகுக்கப்பட்டுள்ள பொருள் சட்டங்களின் தன்மையைக் கொண்டு முற்கூறியவாறு தமிழ் ஒலிக்குறிக்குச்சான்றாய் அவ்வாசிரியர் எழுத்ததிகாரத்தின் முதலிலேயே தமிழ் ஒலி எழுத்துக்களை முறையே நிறுத்திக் கூறியிருக்கும் அமைப்பை நன்கு கவனித்தல் அறிஞர்களின் கடனாகும். மூடியிருந்த வாயை திறந்த மாத்திரையானே அகர ஒலி இயற்கையாக தோன்றுதலின் அதை முன்னும், அதன்பின் இகரம் நாவால் பிறத்தலின் அதைபின்னும் அதன்பின் அவ்வோசை இதழ்வழியே உகரமாய்ச்

சென்று அழிதலின் அதனை அதன்பின்னுமாக திருத்தியுள்ளார். அவ்வோசை பிற்கணத்துத் தொடர்பட்டு நீளுவதே நெடிலாவதாலும் "அ" "இ" "உ" குற்றெழுத்துக்களைமுன்னும் அதன் நீட்டமான "ஆ" "ஈ" "ஊ" வென்னும் நெட்டெழுத்துக்களைப் பின்னுமாக வைத்து மற்றுமுள்ள எழுத்துக்களையும் வரிசைப் படுத்தியுள்ளாரென்பதே சான்று தரும். ஆதியிலுள்ள தமிழ் வட்டெழுத்துக்களில் சிலதை மாற்றியும், சிலதைப் புதிப்பித்தும் கொண்டுள்ளார்களெனினும் சாலும். அந்த வெழுத்தையே தற்காலத்து பண்டிதர்களும், சீர்திருத்தக்காரர்களும் தமிழ் மொழியிலுள்ள உயிர், மெய் எழுத்துக்களை நான்கு முக்கிய பிரிவுகளாகப் பிரித்து வைத்திருக்கின்றார்களென்பது பெறப்படும். அதாவது முதலாவது நேர் கோட்டில் அமைந்த எழுத்துகள் ட. ப. ர. முதலியன. இரண்டாவது நேர் கோடும், வளைவு கோடும் சேர்ந்த வெழுத்துக்கள் க. ங. ச. த. ந. ம. ய. ழ. ற. முதலியன. மூன்றாவது கீழ்ச்சுழி யெழுத்துக்கள் எ. ஏ. ஞ. ள. வ. ல. ன. ண. ஒ. ஓ. ை. ெ. ே. முதலியனவாகும். நான்காவது மேல் சுழி எழுத்துக்கள். அ. ஆ. இ. ஈ. உ. ஊ. ஐ. முதலியன வாகும். நாம் முற்கூறியவாறு மேல்காட்டிய மேல்-சுழியினத்தை சேர்ந்தவைதான் ஈகாரமும். அது எக்காரணத்தினாலோ ஒழிபட்டு ஒன்றுக்கும் பொருத்தமில்லாத (ஈ) இகாரத்தை அமைத்து விட்டனர். இது ஆராய்ச்சியாளர் ஒத்துக்கொண்டமுடிபன்று. மற்ற எழுத்துகளின் வேறுபாட்டைப்பற்றி முன்னரே கூறியுள்ளோம். அதை ஈண்டு விவரிக்க வேண்டியதன்று. தமிழ்மொழி எழுத்துக்கள் மிகவும் குறையுடையன. தமிழில் ஒரே யெழுத்து பல தொனிகளை

குறிக்க வழங்குகின்றது. எனினும் தமிழ் சுயமாய் வழங்குகின்றதென்பதும் மிகையாகாது.

ஆரியர் இந்தியாவிற்கு வந்த காலத்தில் அட்சராப் பியாசமுடையவரா யிருந்ததில்லை. இந்தியாவில் அவர்கள் வந்து தங்கிய பன்னெடு நாட்களுக்குப் பின்னுண்டான அவர்கள் வேதமும், "எழுதாக்கிளவி"யாகவே யிருந்தது. அதுபற்றியே அதற்கு, சுருதி, சுரோத்திரம், மறை எனக் காரணப் பெயர் வழங்கலாயின. "ஆற்றலழியுமென்றந்தணர்க ணான் மறையைப் போற்றி எட்டின் புறத்தெழுதார்" என்பதனால் நன்குணரலாம். ஆரியர் தென்னாட்டுத் தமிழரிடமிருந்துதான் எழுதக் கற்றுக்கொண்டனரோ வெனும் சந்தேகமும் பற்பலருக்குண்டு. இச்சந்தேகம் கொண்டவருள் "தமிழ் ஆராய்ச்சி" எழுதிய திருவாளர் சீனிவாசய்யங்காரு மொருவராவர் (Tamil Studies P. 121) இது வெவ்வாராகினும் ஆகுக. கி. மு. எட்டாம் நூற்றாண்டளவிலேயே எழுத்தும் சுவடியுமா யிருந்தவர் தமிழர்களே என்பதற்கு "தமிழ்சுரங்கக்கனி"யும் பலவுள.

இந்திய எழுத்துக்கள் ஆரியரால் ஆக்கப்பட்டனவல்லவென்பது பல சான்றுகளால் நன்கு வலியுறுத்தப் படுகின்றன. இந்தியாவிற்கு எழுத்துகளை உண்டாக்கியவர்கள் திராவிடரேயாகும். கி. மு. ஏழாம் நூற்றாண்டளவில் திராவிட வியாபாரிகள் மூலமாய் இந்தியாவிற்கு சில எழுத்துக்கள் கொண்டுவரப்பட்டனவென்றும், அதன் பின் இந்தியாவின் பாஷைகளுக்கேற்றவாறு அவ்வெழுத்துக்களை புதுக்கியும் திருத்தியும், சிதைத்தும் வழங்கிக்கொண்டனரென்று ரைஸ்டேவிட்ஸ் பண்டிதர் தாமெழுதிய

(Ibid, P 119) ஆங்கில நூலில் எழுதியிருக்கின்றார் என்பர். பர்னல் பண்டிதர், இ. தாமஸ பண்டிதர் முதலியவர்களுக்கும் இதுவே உடன்பாடாக விருக்கின்றன வென்றும் சிலர் அபிப்பிராயப்படுகின்றனர்.

இதனால் நாம் அறியக்கிடப்பவை யென்னவெனில் கி. மு. ஏழாம் நூற்றாண்டிலேயே தமிழ் மக்கள் எழுத்துடையவரா யிருக்கின்றனர். என்பதற்கு மேற்கூறிய ஆராய்ச்சி வல்லுனர்களின் முடிபே சான்றாகும். ஆனால் திராவிட வியாபாரிகள் மேல் ஆசியாப் பிரதேசத்திலிருந்து எழுத்தை தென்னிந்தியாவினுட் கொண்டு வந்தனர் என சிலர் அபிப்பிராயப் படுகின்றனர். அவர்களின் ஆராய்ச்சித் திரன் தன்னை விடுத்து ஏனையோரை எண்ணி இடர்பட்டவன் கூற்றுக்கு சான்றாகுமே யன்றி வேறன்று. ஏனெனில் முன் நாம் விளக்கியுள்ளபடி மக்கள் தோன்றி, பேசக் கற்றுக்கொண்ட மூகத்தானே ஒலி வடிவிலிருந்து வரிவடிவாக மாறிய இயல்பையும், அங்ஙனம் வரிவடிவும் சித்திர ரூபமாக அமைக்கப் பட்டிருந்ததையும் அச்சித்திரவெழுத்துக்களே வடிவெழுத்து, முடிவெழுத்து, பெயரெழுத்து, தன்மையெழுத்து முதலிய எழுத்துக்களாக ஆதியில் வழங்கி வந்தனறென விளக்கியுள்ளோம். கி. மு. எட்டாம் ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து தமிழ் நாட்டில் வழங்கியதும் இப்போதும் தென்னிந்தியாவின் மேற்குப் பக்கத்தில் ஓரோரிடங்களில் வழங்குவதுமான வட்டெழுத்துகள் தமிழ் மக்கள் தாமே தமக்கென்று பிறருதவியின்றி ஆக்கிக்கொண்டதோர் தனி எழுத்தேயாகுமென்பதற்குச் சிறிதளவும் சந்தேகமின்றாம். இங்ஙனம் துணிந்து கூறுமிடத்தும் பிறிதோர் கேள்வியும் பிறக்கலாம்—என்ன?

தமிழ் மக்கள் தமக்கென்று தாமே ஆக்கிக்கொண்ட எழுத்தில் பிற நாட்டெழுத்துக்கள் போன்ற குறிகளும் காணப்படுகின்றனவே; இக்குறிகள் தமிழரிடத்தில் வரக் காரணமென்ன? வென்பதேயாகும். இவ்வாறு காணப்படும் ஒற்றுமை வெகு அற்பமாயிருக்கும். வேற்றுமையோ அதிகம். நமது முன்னோர் தமிழ் எழுத்தை வரிசை முறைப்படுத்தி அமைத்தகாலத்தில், தம்முள் அதுகாறும் ஆக்கப்பட்டிருந்த எழுத்துக்களை ஒன்றுசேரத்திரட்டி முறைப்படுத்தினர். தம்முட் குறைந்ததும் அதுவரை அமைத்திராததுமான இரண்டொரு ஒலிக்குப் பின்னும் புதிதான வரிவடிவங்களை வரைந்து கொள்ளலாமே. அங்ஙனமின்றிதாம் பிறவிடத்திலுள்ளனவாக அறிந்திருந்த வரிவடிவுகளையே எடுத்துக்கொண்டனரென்பதே காரணமாகுமேயன்றி பிறிதன்று ர. ற. ழ. ள. ன. ந. முதலிய எழுத்துக்கள் இவ்வாறாக உண்டாகி இருக்கலாம் எனக்கொள்ளுதலே தகுதியுடைத்தாகும். கிரந்த எழுத்துக்களை தமிழில் புகுத்தியவர் கிரந்தத்திலில்லாதனவாய ற. ன. ழ. ள. எழுத்துக்களை கிரந்த எழுத்துக்களோடு சேர்த்துக்கொண்டதும் இவ்வொழுங்கு பற்றியதேயாகுமென்பதும் மிகையாது.

இதற்கு மாறாகத் தமிழ் மக்கள் தமக்கென எழுத்தில்லாதிருந்து முழுவதும் பிறநாட்டாரிடமிருந்து எழுத்துக்களைக் கற்றுக்கொண்டனரென்பது முற்றிலும் உண்மைக்கு மாறுபட்டதாவே காணப்படும். இத்தகைய மனோபாவத்தாரின் ஒரு தலை முடிபை கண்டிப்பான் வேண்டியே

"விதியவன் முன்னான் குயிர்தனைச் செய்ய

[விரிசடையோன்

துதியுடை நாரணன் செவ்வேள் இந்திரன்
[சூழ்ந்து வருங்
கதிரவன் சோமன் தருமன் வருணன் கனக நிதிப்''
'புதியவ னென்றிவர் மூவா உடம் படைத்தளரே'

என்ற செய்யுளும் தோன்றியது போலும்,

இதன் பொருள்:— அகரமுதல் ஔ ஈறாகக்கிடந்த உயிர் பன்னிரண்டும். பிரமனால் வகுக்கப்பட்டதென்றும் "க். ங்." சிவனாலும், "ச் ஞ்," விஷ்ணுவாலும், "ட். ண்" சுப்பிரமணியனாலும், "த் ந்" இந்திரனாலும், "ப். ம். சூரியனாலும், "ய். ர் சந்திரனாலும், "ல். வ்" தருமனாலும் "ழ். ள்." வருணனாலும், "ற். ன்." குபேரனாலும் எனப் பொருள் கொள்ளத்தக்கதாம். அன்றேல்.

"அகர முதற் பன்னிரண்ட யன ாகும்
பகவான் 'க ங'வும் பாற்கடல் 'ச ஞ'வும்
செவ்வே'ட ண'வும் தேவர்கோன் 'த ந'வும்
தினகரன் 'ப ம'வும் திங்கள் ய ர'வும்
மறலி 'ல வ'வும் வருணன் 'ழ ள'வும்
அளகையன் 'ற ன'வுமாக்கினரென்க"

என்றபடி தங்கள் கருத்துக்களை எடுத்து விளக்கியுள்ளாரெனினும், நாம் நடுநிலை பிறழாது பல நூற்களைச் சான்றாகக் கொண்டும், ஆராய்ச்சி வல்லுனர்களின் முடிபைக் கொண்டும், பல புதினத்தாள்களில் வெளியாகும் அறிஞர்களின் கட்டுரைகளைக் கொண்டும் ஆராய்ந்து போய்க்கொண்டிருக்கையில் மேற் காட்டியபடி எழுத்துக்களை ஆக்கியோர்களின் முடிபு நமக்கு உடன்பாடாகாதென்பதை மட்டும் தெரிவித்துவிட்டு மேற் செல்வாம்.

இற்றைக்கு மூவாயிரம் ஆண்டிற்கு முன்னதாகவே மேற்றிசையிலுள்ள பீனிசியர் என்னும் சாதியார் தென்னிந்தியாவின் மேற்குப் பாகத்திலுள்ள மலையாளக்கரையிலும் கிழக்கே உவரி கொற்கை, என்னும் கடற்றுறைப் பட்டினங்களிலும் வந்திறங்கித் தமிழரோடு வாணிபம் நடத்திவந்தார்களென்றும் அவர்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்புங் காலையில் யானைக்கொம்பு, மயிற்றோகை, எலி மயிர், குரங்கு, சந்தனக்கட்டை விலையுயர்ந்த முத்துக்கள், அரிசி, கருவப்பட்டை, முதலிய சரக்குகளை வாங்கிக்கொண்டு போனார்களென்றும் சாலமன், என்னும் மேல் நாட்டரசன் காலத்தில் கூட்டம் கூட்டமாய் இந்தியாவிற்கு வந்தார்களென்றும் ஹீபுறு பாஷையில் எழுதப்பட்டிருப்பதாக அறியக்கிடக்கிறது. (விவிலிய நூலில் இதற்குப்போதிய சான்றுகளுண்டு.)

சாலமன் என்னும் வேந்தன் இற்றைக்கு மூவாயிரம் வருடங்களுக்கு முன் அரசுபுரிந்து வந்தவன் என்பது சரித்திர ஆராய்ச்சியாளர்களால் ஒப்பமுடிந்த உண்மையாகும். அவன்காலத்திலேயே தொல்காப்பியர் எழுத்ததிகாரம் வகுத்துக்கொண்டு எழுத்துக்களின் இலக்கணத்தைச் செப்பனிட்டாரெனக் கூறுகின்றமையாலும் எழுத்துக்களில்லாவிடின் அங்ஙனமெல்லாம் இலக்கணங் கூறுதல் எவ்வகையாற்றாலும் முடியாதென்பது தேற்றம்.

நிற்க, இனி பௌத்த சமயம் மேற்கொண்ட அசோக மன்னன் காலத்தில் செதுக்கப்பட்ட கல்வெட்டு எழுத்துகள் இருவகைப்படுகின்றன. ஒன்று வலது புறத்திலிருந்து இடது பக்கமாயும் மற்றொன்று இடதுபுறத்திலிருந்து

வலதுபக்கமாயும் எழுதப்பட்டிருக்கின்றன. (R.C. Dutt's Ancient India P, 24 2nd vol) முன்னையது கபுர்த்த கிரிச் சிலாசாசனங்களிற் காணப்படுகின்றன. இது வட அசோகலிபி என்று சொல்லப்படும். பின்னையது அசோக வேந்தன் கல் வெட்டுக்கள் பெரும்பாலானவற்றிலும் காணப்படுகின்றது. இது தென் அசோகலிபி என்றும் சொல்லப்படும். வடஅசோக எழுத்துக்கள் இந்தியாவின் வடமேற்குப்பாகங்களில் மாத்திரம் அருகி வழங்குகின்றன. தென் அசோகவெழுத்துக்கள் இந்தியாவில் பெரும்பாலும் எங்கும் வழங்குகின்றன. ஆகையால் தென் அசோகவெழுத்துக்கள் இந்தியாவிலே பிறந்த எழுத்துக்களாகுமென்பது நன்கு பெறப்படும். ஏனெனில், பிற நாட்டிலிருந்து வந்த எழுத்துக்கள் இந்தியாவிலுள்ள இந்திய மக்கள் எல்லாருக்கும் எளிதில் விளக்கமுற மாட்டாததினால் அவை அப்புறநாட்டையடுத்த இந்தியா எல்லையில் மாத்திரம் உபயோகிக்கப்படுத்தப்பட்டன. உள்நாட்டு எழுத்துக்களை யாரும் தெரிந்து கொள்ள வசதியிருப்பதினால் அவை இந்தியாவெங்கும் உபயோகப்படுத்தப்பட்டு வந்தன. ஆகையாற்றான் தென் அசோக வெழுத்துக்கள் இந்தியாவிற்கே உரியதென்பதை, இவ்வியல்பு. முற்றிலும் ஆராய்ந்து கண்ட தாமஸ், கன்னிங்காம் என்னும் சிலாபரிசோதனைப் பண்டிதர்கள் இருவர்களும் நன்கு விளக்கியிருக்கின்றனர்.

இனி, தென் அசோகலிபி என்பது தமிழ் வட்டெழுத்துக்களின் திரிபேயன்றி வேறன்று. ஆகையால் அது தமிழருக்கே உரியதென்று துணிந்து கூறலாம். வட அசேகாலிபியும் தமிழர் வழியாய் பெறப்

பட்ட பீனிசியர் எழுத்தேயன்றி வேறல்ல. இவ்வாறு எழுத்துக்களின் பாகுபாட்டைப் பொருந்தக்காட்டாமை யால் தான் இந்தியாவில் வழங்கிவரும் எழுத்து பீனிசிய ரிடமிருந்து வந்ததெனக்கூறுவாருமுளர். எடுத்துக் காட்டாக ஒன்று கூறுவோம். ஈஜிப்ட் தேசத்தாரும் அராபியா தேசத்தாரும் ஐரோப்பியரும் எண்களைத் தமிழரிடத்திலிருந்து பெற்றுத்தான் தமது மொழிகளில் ஆக்கிக்கொண்டார்கள். தமிழ் இலக்கங்களின் வடிவங் களையும் மேற்கூறிய பாடையினரின் வடிவங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அதன் உண்மை இனிது புலனா கும் என்பது கண்கூடு. ஒன்பது என்ற பொருள் ஒன்று குறைய பத்து என்பதாகும். அதன் வடிவம் "கூ" அதன் பூர்வ காலத்தின் வடிவம் "10" இந்த மாதிரி தான் அமைக்கப்பட்டிருக்கிறது. அது தற்காலத்தில் கூ, 9, இப்படியாகத் திரிந்துவிட்டது. மற்ற எண்களுக் கும் தமிழ் எண்ணின் ஒற்றுமை மதிப்பும் காணப்படு வதை நன்குணரப்பாலதாகும். சொல்லும் பொருளும் வரி வடிவும் ஒத்திருத்தலே அது தமிழ் இலக்கமென் பதைக் காட்டும். "ஒன்றொழி பத்து" என்னும் பதப பொருள் தரும் இலக்கப் பெயர் மற்றெந்த மொழி களுக்குமில்லையென்றால், அதற்கு வேறு சான்று எதற்கு?

அக்காலத்திற்றானே நமது தமிழ் மக்களிடையே தற்காலத்தில் வழங்கிவரும் சுருக்கெழுத்துக்கள் "ஊசி முறி" என்னும் பெயரால் வழங்கிவந்தன. திரு வாளர் ராவ் சாகேப், R. கிருஷ்ணராவ் போன்ஸ்லே அவர்கள் 1923-ம் ஆண்டு டிசம்பர் மாதம் வெளியான "South Indian Research" என்ற சஞ்சிகையில்,

"மதுரையிலிருந்த மூன்றாவது தமிழ்ச் சங்கத்தில் நக்கீரரைத் தலைமையாகக் கொண்டு நாற்பத்தொன்பது புலவர்கள் அங்கம் வகித்திருந்தனர். வெளியிலிருந்து வரும் புலவர்கள் அரசனிடம் பரிசு பெறப் புதிதாய் இயற்றிச் சங்கத்தில் அரங்கேற்றக் கொண்டு வரும் நூல்களை ஆராய்ந்து முடிவு கூறுவது வழக்கம். அங்கு வரும் புலவர்களைப்பற்றியும் எழுதிவரும் நூல்களைப்பறியும் சங்கத்தலைவருடைய அபிப்பிராயம் எவ்வாறிருப்பினும், அவரும் சங்கத்திலுள்ள அங்கத்தினர்களும் ஒரு சூதான தந்திரத்தால் வந்த வித்வானுடைய நூலை அங்கீகரிக்காது நிராகரித்து வந்தார்கள். எவ்வாறெனில், ஒரு வித்துவான் சுயமாய் ஒரு நூலை இயற்றிக்கொண்டு வந்தாலும் இவர்கள் அது புதிதாயியற்றப்பட்டுவந்ததல்லவென்றும் தங்களுடைய புத்தகச் சாலையிலுள்ள பழைய நூலேயென்றும் கூறி, ஒரு, பிரதியைக் காட்டி வந்த வித்துவானைப்பிரமிக்கச் செய்வதோடு, அவரைக் கள்ளனாகவும் ஆக்கிவிடுவார்கள். இத் தந்திரம் எவ்வாறு நடந்தது? அச்சங்கத்தில் சுருக்கெழுத்து எழுதுவோர் இருந்தார்கள். அவர்கள் சங்க அவயவிகளுக்குப் பின்னால் பள்ளமான இடத்தில் சபையோருக்குப் புலப்படாவண்ணம் மறைவாய் உட்கார்ந்து இருந்தார்கள். புதிதாய் வந்த வித்துவான் தன் கவிகளைக் கூறிக்கொண்டேயிருக்கையில் சுருக்கெழுத்தில் பழகிய இவர்கள் அவற்றை சுருக்கெழுத்தில் குறித்துக் கொண்டு, பிறகு சாதாரண எழுத்தில் எழுதித் தங்கள் பழய நூல்களில் இருந்து எடுத்தது போலக்காட்டி, வந்த வித்துவானைத் தோல்வியடைந்து பிரமித்து நாணத்தோடு திரும்பிச் செல்லச் செய்வார்கள். அநேக வித்துவான்கள் இந்த மோசடிக்குள்ளானார்கள்.

இடைக்காடர், திருவள்ளுவர் ஔவையார், இவர்கள் மூவரும் சங்கத்திற்கு செல்லும் வரை இந்த மோசச் செய்கை நடந்துகொண்டே இருந்தது. இடைக்காடர் சங்கத்தார் செய்கையை யூகித்துக்கொண்டு பட்சிகள் மிருகங்களின் ஒலிகள் கலந்த பாவை வரைந்து சங்கத்தார் முன் பாடினர். சுருக்கெழுத்து வரைவோருடைய எழுத்தாணி அந்த ஒலிகளை எழுதக்கூடவில்லை. அந்தப் பா வருமாறு:—

பூளைப்பம் சொப்பப்ப் உஉஉஉஉஉதிச்
சூளைச் சாம்பல் பூசும் சொல்வலீர்கூ உம்ழ்ம்ப்
பப்பன்று கா அம்ம் பயல் மனமேற்றாலன்றி
ஒப்பாது நும்மறைச் சொல் கூண்ம்ம்',

இவ்வாறு பாவைப் பாடி அவர்கள் தந்திரம் பலிக்காத படி செய்து அச்சங்கத்தாரின் அகங்காரத்தையடக்கிவிட்டார்.

அநேகம் வித்வான்கள் கூறிய கவிகளை அவர்கள் சொல்லிக்கொண்டு போகும்போதே சங்கப் புலவர்கள் சுருக்கெழுத்தின் உதவியின்றி எழுதியிருக்க முடியாதென்பதை யாவரும் ஒப்புக்கொள்ளவேண்டிய விஷயமேயாகும். தேச பர்சைகளில் தமிழ் மட்டுமல்ல. தெலுங்கு, கன்னடம் மலையாள பாசைகளிலும் சுருக்கெழுத்து ஏற்படுத்தலாகுமென்பது நிச்சயமாய்த் தோன்றும். இப்பொழுது மேல் சொல்லிய எல்லா பாசைகளிலும் அரசாங்கத்தாரால் சுருக்கெழுத்துப் பரீக்ஷை நடந்து வருகிறது. பூர்வீகத்திலும் அது ஆகக் கூடியதாகவேயிருந்திருக்கவேண்டும். இவ்வுலகில் எதுவும் புதிதல்ல. சங்கத்தார் உபயோகித்து வந்த சுருக்

கெழுத்து எத்தகையதெனக் கூறமுடியாது. ஆனால் சுருக்கெழுத்து எழுதுவோன் (Phonagraphe-சத்தத்தை வடிவமாக வரைவோன்) என்பதற்குத் தமிழில் சரியான பதம் இருந்திருக்கிறது. திரிசிரபுரம் S. P. G. கல்லூரியைச் சேர்ந்த பண்டிதராகிய ஸ்ரீமான் பூரணலிங்கம் பிள்ளையவர்கள் இப்போதிருக்கும் தமிழ்ச் சங்கத்தில் "ஊசி முறி" என்ற கவிதளைப்பற்றி பேசிய போது அவற்றில் இரண்டொரு கவிகளைக் கூறி இடைக்காடர், வித்வான்களை ஏமாற்றிக்கொண்டிருந்த சங்கத்தார்களை எவ்வாறு பங்கப்படுத்தி ஜெயமடைந்தார் என்பதை நிரூபித்தார். தமிழ்க் காவியங்களில் பிரசித்தி பெற்ற "காரிகை"யின் உரையிலும் தொல்காப்பியத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையிலும் அந்த "ஊசி முறி"க்கவி குறிக்கப்பட்டிருக்கிறது. சென்னை மேரி இராணியாரது பெண்கள் கல்லூரியில் போதகாசிரியராயிருந்த ஸ்ரீமான் கா. நமச்சிவாய முதலியார் அவர்களது பேருதவியால் அவரிடம் எழுத்துப்பிரதியாகவிருந்த இந்த அருமையான கவியை நான் பார்வையிடலானேன். மேற்படி கவிக்கு "ஆரைப்பொய்யிலான்" எழுதிய உரையில் சுருக்கெழுத்தெழுதுவோன் என்பதற்கு (Phonographer) தமிழ்ப்பதம் "ஒலியெழுத்தாளன்" என்று குறிக்கப்பட்டிருக்கிறது-ஒலி+எழுத்து+ஆளன். "சத்தத்தை வரிவடிவாகிய எழுத்தாக எழுதுவோன்" என்பது இதன் பொருள். "ஊசி முறி" என்பது ஊசி= எழுத்தாணி முறி=உடைதல், அதாவது எழுதமுடியாமற் செய்தல் என்பது இதன்பொருள்.) ஆதலால் இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது என்னவெனில், பூர்வ காலத்திலுள்ள தமிழ் மக்களிடையே, சிலருக்கு சுருக்கெழுத்து எழுதக் கற்றுக்கொண்டிருந்தார்களென்பது

மேற்கண்ட உதாரணங்களிலிருந்து தெளிவாக விளங்குகின்றனவன்றோ? நந்தமிழ் மக்கள் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னமேயே தமிழ் வளர்ச்சி மிக்காராய் இருந்தனரென்பதும் அதன் பெருமையை நோக்கி அதற்கு விசேட அடமொழிகொடுத்து செந்தமிழ், தெய்வத்தமிழ், கன்னித்தமிழ், தண்டமிழ், அருந்தமிழ், நற்றமிழ், சொற்றமிழ், மெய்த்தமிழ், சுவைத்தமிழ், வடித்தமிழ், மூது தமிழ், வண்டமிழ், ஒண்டமிழ் எனப் பலவாறு புலவர்கள் தத்தம் நூல்களில் சிறப்பித்துக் கூறிப்போந்தனர். இத்தகைய தமிழ்ச் சிறப்பினையும் அதன் தொன்மையும் நன்குணர்ந்த மாட்சிமைதங்கிய சென்னைக் கவர்னர் "கிராண்டப்" என்பவர் ஓர் பரிட்சா பட்டமளிக்கும் சமயத்தில் செய்த சொற்பொழிவில் "தமிழருடைய பழமையை நோக்குங்கால் ஆரியருடைய பழமையானது ஒரு கணப்பொழுதுக்கு முன்பெற்ற "ரூட்டர்" தந்திச் சேதியை ஒக்கும்" என்று மொழிந்துள்ளார். தேசாதிபதியவர்களும் தமிழின் தொன்மையை நன்குணர்ந்திருந்தபடியால் பட்சபாதமின்றி உள்ளதை உள்ளவாறு மொழியலுற்றார் என்பது நன்குணரப்பாலதாகும்.

இத்தகைய தமிழ் பாஷையின் வரலாற்றை ஆகம ஐதீகப் பிரமாணங்களைக் கொண்டு ஒருவாறு நிச்சயித்து வந்தார்களேயன்றி தற்கால விஞ்ஞான ஆராய்ச்சியாளரின் முடிபைப்போல் நிச்சயிக்கவில்லை. இதனைப் பிரிதோர்சமயமாராய்வோம். நிற்க, தமிழ்ப் பூர்வக்குடிகள் தங்களுக்குள் தோற்றுவித்த எழுத்தினை எங்ஙனம் பாதுகாத்து வந்தனர் என்று ஆராய்ந்தால், பழந்தமிழ்க் குடிகள் பூர்வத்தில் தாங்களாகக் கண்டுபிடித்த எழுத்துக்களைக் களிமண் தகட்டில் எழுதி அதை நெருப்பி

விட்டு சுட்டு அடிக்கிவைத்துக்கொண்டு வந்தார்களென்ற றியலாம். இடைக்காலத்தில் அறிவும் ஆற்றலும் உண்டான வுடன் அவ்வெழுத்துக்களை நன்கு திருத்தமுறச் செய்து, பனை, ஈந்து முதலிய ஏடுகளில் எழுத்தாணி கொண்டு எழுதக்கற்றுக்கொண்டார்கள். சாசன முதலிய அரசாங்க உடன்படிக்கை முதலியவைகளை செப்பேட்டில் எழுதப் பட்டிருந்ததென்று பல ஆராய்ச்சியாளர்கள் உரைத் திருக்கின்றனர். இதர தேசத்தவர்களும் இலை, தோல் முதலியவற்றிலும் எழுதிவந்ததாகத் தெரிய வருகிறது. தற்காலத்தில் உலக மக்கள் எல்லோராலும் தாளில் மசியினால் எழுதி வருகின்றார்கள். தாளில் எழுதும் கருவிகளும், அவசரத்திற்கும் அவசியத்திற்கும் தக்கபடி (Fountain Pen) ஊற்றுப்பேனாவும் ஏற்பட்டன. அதிலிருந்து இன்னும் சவுகரியமானதும் கையெழுத்தைப் போல் சித்திரக்கோலமில்லாமல், அச்செழுத்தைப்போல் சுத்தமாகவும் தெளிவாகவும் நிமிடத்திற்கு 100 முதல் 200 வார்த்தைகள்வரையில் அச்சடிக்கும் (Type-writer) டைப்ரைட்டர் இயந்திரங்களைக் கண்டுபிடித்து உபயோகித்துக்கொண்டு வந்தார்கள். அதை ஏனைய பிறபாஷையாளரும் பின்பற்றித் தங்கள் தங்கள் மொழிகளில் "இடந்திரப் போறி" (Type-writer) களைச்செய்து தங்கள் காலத்தையும் நேரத்தையும் மிச்சப்படுத்திக் கொண்டார்கள். ஆனால் தமிழ் மக்கள் மாத்திரம் அதைப்பற்றி சிறிதும் சிந்திக்காது வாளாவிருந்து விட்டார்கள். இவர்கள் சிந்திக்காவிட்டாலும் மேனாட்டாருக்கு மாத்திரம், சிறப்பாக இந்தியர்களும் குறிப்பாகத் தமிழ் மக்களும் யோகநித்திரையில் ஆழ்ந்துவிடக்கூடியவர்களென்று நன்றாய்த்தெரியும். அவர்கள் தங்கள் தேச

ங்களில் தமிழ் டைப்ரைட்டரை தயார்செய்ய ஆரம்பித்து தங்கள் சூட்சம புத்தியினால் 226 தமிழ் எழுத்தும், 90 சமஸ்கிருதஎழுத்துக்களும் 10எண்களும், இன்னும் புள்ளி காமா, கோடு, ரூ, ஷி முதலியவைகளையும் சேர்த்து 46 கீ போர்ட்டில் அடக்கி, பார்வைக்கு இங்கிலீஷ் மெஷின்களைவிட எந்த வகையிலும் குறைபாடில்லாததுமான "இயந்திரப்போறி"களைச் செய்து இந்தியாவிலும் தமிழ் மக்கள் வதியும் பிறநாடுகளிலும் ஏராளமான மெஷின்களைக் கொண்டுவந்து நிரப்பி விட்டார்கள். இதனால் மேல் நாட்டார் ஏராளமான லாபத்தை அடைந்தாலுங் கூட தமிழ் மக்களின் அறியாமைக்கு ஒரு வழிகாட்டியாகவும் தமிழ் மொழிக்கு ஒரு பெருமையும் அளித்ததற்காவது அவர்கள் பால் நாம் நன்றி பாராட்டக்கடமைப்பட்டவர்களாக வேண்டும்.

இந்த, தமிழ் 'இயந்திரப்போறி'யிலும் நான் ஆரம்பத்தில் எடுத்துக்காட்டியபடி ணா, றா, ரு, லை, ளை, ணை, ணை, முதலிய எழுத்துக்களை நீக்கி விட்டு அதற்குப் பதிலாக வேறு உபயோகமான ¼, ½, ¾, முதலிய பின்னங்களையும் ( ) இது போன்ற வளைவுக் குறிகளையும், ஹூ, மீ, கி, முதலியவைகளையும் சேர்த்திருந்தால் இன்னும் எவ்வளவோ பிரயோஜனத்தைக் கொடுக்குமென்பது அனுபவசாலிகளுக்கு நன்கு விளங்காமற் போகாது. ஆகையினால்தான் இவைகளெல்லாம சிறிய காரியமாக எண்ணிவிடாமல் தமிழ்ப் பற்றுடைய அறிஞர்கள் காலததிற்கேற்றவாறு தக்கன செய்ய முன்வர வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கின்றோம்.

---

## முடிவுரை.

நிற்க, இதுவரையில் நாம் தமிலெழுத்துக்களின் சிதைவுகளையும் அதனதன் வேற்றுமைகளையும் நீக்கி பூர்வகாலத்திலிருந்தவாறு எழுத்துக்களை அமைத்தல் சிறப்புடையனவாக இருக்குமென்றும், எழுத்துக்கள் ஆதியில் எப்படி உற்பத்தியானதென்பதையும், அஃது கடவுளரால் உண்டாக்கப்பட்டனவல்லவென்றும், நிலவுலகில் மக்கள் தோன்றிப்பேச ஆரம்பித்தபிறகுதான் எழுத்துக்களுண்டாக்கப்பட்டனவென்றும், அதுவும் சித்திர வெழுத்தாக இருந்தவைகள காலாந்திரத்தில் சீர்திருத்தப்பட்டு தற்கால நிலமைக்கு வந்தனவென்றும், அதற்கான பல சான்றுகளையும் ஆராய்ச்சி வல்லுநரின் அபிப்பிராயங்களையும் தக்க மேற்கோள்களுடன் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்துக் காட்டியுள்ளோம் இதிலிருந்து அறிஞர்கள் தமிழ் எழுத்துக்களின் இயல்புகளை நன்குணர்ந்துபார்க்கப்பாலதாகும். என்றாலும் இன்னும் எமது மனத்திலுள்ள குறைபாடுகளைப்பூரணமாய் வெளியிட முடியாமைக்காக மிக மிக வருந்துகின்றேன். ஏனெனில் சில பிற்போக்கான பண்டிதர்களும் ஆராய்ச்சியற்ற குழுவினரும், "கூபமண்டூக"மெனத்தக்க சில தாளாளர்களும், இவ்வளவு காலமாக நடமுறையில் இருந்துவந்த தெய்வத் தமிழ் எழுத்தைத் திருத்தம் செய்ய முன்வந்துள்ளது அறிவுடமையாகுமா? வெனஎம்மீது குறைகூற முற்பட்டுவிடுவார்களென அஞ்சியேநாம். என்றாலும் எமது உள்ளக்கிடக்கையை சிறிதளவாவது அறிஞருலகத்திற்கு சமர்பித்துவிட்டால், எம் மனதிலுள்ள ஆவல் ஒருவாறு தணியப்பட்டுவிடுமெனத் துணிந்தே நண்டு சிலவைற்றைக்குறிப்பிடத்துணிந்தேன்.

எடுத்துக் காட்டாக நந்தமிழ் மொழியில் பிற பாஷையை அப்படியே மொழி பெயர்த்துஎழுதுவதற்குச் சொல்லும், எழுத்தும் இல்லாமைபற்றி எந்தத் தமிழ் மொழிப்பற்றுடையாரும் கவலையுறாதிருக்க முடியாது. ஆங்கிலத்திலுள்ள வார்த்தையை அப்படியே மோட்டார் கார், டிராம்கார், கிராமபோன், வயர்லெஸ், ஏரோப் ளேன் எனச் சொல்லிக்கொண்டாலும் உச்சரிப்புத் தொனியைப்போல் எழுத்தால் எழுதமுடியாத காரியமாக விருக்கின்றதென்பதை ஆங்கிலம், தமிழ் இரு மொழி களிலும் நன்குணர்ந்தவர்களுக்கு (அதன் வித்தியாசம்) புலனாகாமற் போகாது. உதாரணமாக ஆங்கிலத்துள்ள B. P. இந்த இரண்டெழுத்தின் ஒலிக்குறிப்பை தமிழில் "பி" என்றுதான் குறிப்பிடவேண்டியிருக்கின்றது. அது போலவே F. T. D. Z. முதலிய யெழுத்துக்களையும் தமிழில் எழுத முடியாதென்பது மிகையாது. ஆகையால் இவைகளுக்கெல்லாம் புதிய எழுத்தை அமைத்துக்கொள் ளவேண்டும். தற்காலத்தில் எங்குபார்த்தாலும் சீர்தி ருத்த முரசுசெவிடுபட முழங்குகின்றன, சுதந்திர ஊற்று கரைபுரண்டு செல்லுகின்றன, சமதர்மக் காற்று சண்ட மாருதம்போல் வீசுகின்றன, வினாடிக்கு வினாடி விஞ் ஞானப் புதுமைகள் தோன்றுகின்றன, வாழ்க்கை நலனுக் குரிய சுகபோகங்கள் பல புலப்படுகின்றன, தேசங்கள் செழிக்கின்றன, அதிகாரம் வலுக்கின்றன. மீண்டும் வேறு பாஷைகளிலிருந்து மொழிகளைக் கொண்டால் தெய்வக் குறையும், மதத்துரோகமும் இலக்கணக் குற்ற மும் வந்து விடுகின்றன. அந்தோ! நந்தமிழ் மக்களின் மனப் போக்குதான் இருந்தவாறென்ன? பிறதேச மக்க ளுடன் கலந்துறவாடவும் அவர்களுக்குப் போட்டியாக நடை உடை, ஊண் முதலிய எல்லா வகையிலும் சமத்

துவம் பாராட்டி நடந்துகொள்வதில் நாம் பின்வாங்குவ தில்லை. அத்தகைய நிலமைக்கு நாம் வந்துவிட்டபடி யால் அவர்களின் பாசைப்பதங்களையும் அப்படியே எழு திக்கொள்ள வசதியிருத்தல் வேண்டுமென்பது முறையா கும். அதற்காகவே சில புது லிபிகளையும் அமைத்துக் கொள்ள வேண்டும்.

ஆனால் சிலர் பிறமொழியை தமிழில் கலத்தல் கூடாதெனவும் வேறு புதிய எழுத்துக்களை அமைத்தல் இலக்கண இலக்கியங்களுக்கு முரண்படுமென்றும் வாதிப் பார்கள். அது முற்றிலும் பொருத்தமற்ற அபிப்பிராய மாகத்தான் இருக்கமுடியுமேயன்றி வேறன்று. ஏனெ னில் தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 226, எழுத்துகளிலி ருந்தும் பிறமொழியை சரியானபடி உச்சரிக்க முடியா மையால், ஆரிய பாசையாகிய சமஸ்கிருதத்திலிருந்து ஹ. ஜ. ஸ. ஷ. க்ஷ. முதலிய தொண்ணூறு எழுத்துக் களை எடுத்துக்கொள்ளவேண்டி யிருந்தது. அதுவும் போதாமல் தோழர் வடுவூர் கே. துரைசாமி அய்யங்கார் அவர்கள் தாமியற்றிய "அரசியல் தத்துவ சாஸ்திரம்" என்னும் நூலில் சில ஆங்கில பதத்தை தமிழில் உச்ச ரிக்கவேண்டி புதிதாக சமஸ்கிருத லிபியிலிருந்து 52, எழுத்துக்களை உபயோகித்திருக்கின்றார். இப்படியே சேர்த்துக்கொண்டு போனால் 220, மொழி வேற்றுமை யுள்ள இந்தியாவில் நல்லதமிழ்மொழியின் கதியென்னவா குமென்பதை திருத்தம் வேண்டாதவர்கள் உணரப்பால தாகும். ஆகையால் பிற பாசையை சரியானபடி தமி ழில் எழுதுவதற்கு இன்னும் சிலவெழுத்துக்களைச் சேர் த்துக்கொள்வதைப்பற்றி ஒன்றும் கெடுதலேற்பட்டு விடாது. இருந்தாலும் எழுத்துக்கள் அதிகப்பட்டுக்

கொண்டு போகிறதே என்கிற அபிப்பிராயம் எழுந்தாலும் எழலாம். நான் முதலில் குறிப்பிட்டபடி ஆங்கிலவெழுத்துக்களின் உச்சரிப்புக்குத் தக்கபடி எழுத்துக்களை அமைப்பதற்கு எத்தனை எழுத்துகள் சேர்க்கப்படவேண்டுமோ அத்தனை எழுத்துகளும் தமிழில் பிரயோசனமற்றுக் கிடக்கும் எழுத்துக்களை நீக்கிவிட்டால் போதுமானதாகும். உதாரணமாக "ங" முதல் "ங்" ஈறாகவுள்ள பதினெட்டு எழுத்துக்களில் தலையெழுத்தும், கடையெழுத்தும் நீங்கலாக பாக்கியுள்ள பதினாறு எழுத்துக்களும் பிரயோசனமற்றவெழுத்தென்பதை சுட்டிக் காட்டாமலே தெரிந்து கொள்ளலாம். இது போலவே இன்னும் அநேக எழுத்துகள் உருமாற்றமடைந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் நீக்கி விட்டு அதற்குத்தக்க புதிய எழுத்துக்களை சேர்த்துக்கொண்டு தற்கால உலகப்போக்கையும், நந் தாய்மொழி வளர்ச்சியடையும் மார்க்கத்தையும் அறிஞர்கள் சீர்தூக்கிப்பார்த்து, தமிழுலகுக்குப் பயன்படும் பொருட்டு என்னிலும் கற்றாரும் வலியாரும், பெரியாருமாகிய பலரையும் இத்தகைய முயற்சியில் ஈடுபடும் பொருட்டு இறைஞ்சுகின்றேன்.

---

## எழுத்துக்களும் அவற்றின் சரித்திரமும்.

———)o(———

(19-3-31-ல் "குமரன்"

வெளியீட்டில ரத்னம் என்பவர் எழுதியது.)

———)o(———

I

நம்முடைய எண்ணங்கள் தொடுகின்ற மிகப்பழைய காலத்திலே வசித்துவந்த ஆதி மனிதர்கள், தாங்கள்

வேட்டையாடிய திறமையையோ, யுத்தத்தில் அடைந்த ஜெயத்தையோ, அரசர்களுக்கு அளித்த காணிக்கையையோ குறிப்பதற்கும், தங்களுடைய ஆயுதங்கள், மட்பாத்திரங்கள் முதலியவற்றைக் குறிப்பதற்கும் அடையாளங்களை வகுக்க ஆரம்பித்தனர். அதன்பிறகு, மத விஷயங்களையும், ராஜீய விஷயங்களையும் பிறர்க்கு உணர்த்துவதற்காவும், தூர தேசங்களில் வியாபாரஞ் செய்துகொண்டிருக்கும் தங்கள் காரியஸ்தர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்வதற்காவும் ஏற்படுத்திக்கொண்டக் குறிப்புகளே எழுத்துக்களாகப் பரவி, உலகத்திலே இணையற்ற ஆச்சரிய சாதனமாக வியாபித்து வருகின்றன. முன்னோர் நாட்களையும் எண்களையும், கயிற்றின் முடிச்சுகளினால் காட்டினர். பிறகு இயற்கைப் பொருட்களைத் தோல்களிலும், மரப்பட்டைகளிலும், மரங்களிலும், எலும்புகளிலும் களிமண் பலகைகளிலும் கற்களிலும் சித்திரித்து விளக்கினர். அமெரிக்க இந்தியர்கள், இச்சித்திர வெழுத்துக்களினால் பற்பல சம்பவங்களை விளக்கியதோடு, சங்கேதக் குறிகளினாலும், சாயங்களினாலும், சண்டைகளையும், சமாதானங்களையும் விளக்கினர். இச்சரித்திர வெழுத்துக்கள் ஆதி மனிதர்களுக்குத் தங்கள் அவசியமான எண்ணங்களை வெளிப்படுத்துவதற்கு ஆதாரங்களாயிருந்தன. இன்றைக்கு 6000 வருஷங்களுக்கு முன்னரே இம்முறைகள் எகிப்து தேசத்திலும் பாபிலோனியாவிலும் கையாளப்பட்டன.

பழய உலகத்தில் நாகரீகம் வளர ஆரம்பித்ததன் பிறகு, தங்கள் பெருகிய வாழ்வில் இச்சித்திர வெழுத்துக்கள், எண்ணங்களை நேர்முறையில் விளக்கப்போதிய ஆற்றலற்றிருந்தமையின், புதிய மாறுதலைச் செய்ய முயன்றனர்.

எகிப்தியர்களும், பாபிலோனியர்களும், சீனர்களும் இச்சித்திரங்களைக் குறுக்க ஆரம்பித்தனர். ரிஷபங்களை அவற்றின் கொம்புகளினாலும், கண்களை உட்புள்ளியிட்ட வட்டங்களினாலும் உணர்த்தத்தொடங்கினர். பிறகு, பதங்களையும், அசைகளையும் குறிக்குமாறு அவற்றைத் திருத்தினர். கிரீடத்தையும் மரத்தையும் சித்தரித்து அரசமரத்தை விளக்கினர்.

இவ்வெழுத்து முறை ஹிரோகிளிபிக் என்று வளங்கப்படுகின்றது. இம்முறை எகிப்திய நாட்டு முதியர்களினால் கற்களில் தோண்டப்பட்டும், பேப்பிரஸ் என்னும் செடிகளினால் செய்யப்பட்ட பேப்பர் என்னும் கடிதங்களில் பேனாவினாலும் பிரஷ்களினாலும் எழுதப்பட்டும் இன்றும் காணக்கிடக்கின்றன.

அமெரிக்க இந்தியர்களில் நாகரீகம் பெற்றிருந்த தென் மெக்ஸிகோவில் வசித்துவந்த மாயாஸ் என்னும் ஜாதியினரும் ஆஸ்டெக்ஸ் என்னும் ஜாதியினரால் அழிக்கப்படும் வரை இம்முறையை சீர்திருத்திக்கொண்டிருந்தனர். கலாவளர்ச்சிக்கு இச்சித்திரவெழுத்துக்கள் ஏராளமான உதவிகள் செய்திருக்கின்றன. எகிப்திய பாபிலோனிய சீனர்களின் கலாஞானங்க்ள் இம்முறையால் வளர்க்கப்பட்டன. சீனர்களின் எழுத்து முறை இன்றும் பெரும் மாறுதலின்றியே காணப்படுகின்றது. பேனாவும் பென்சிலும் கிடைக்காத பழைய காலத்தைப் போன்றே இன்றும் பிரஷ்களினாலேயே சீனர்களின் எழுத்துக்கள் சித்தரிக்கப்படுகின்றன. பாபிலோனியர்கள் களிமண் பலகைகளில், வேலைப்போன்ற எழுத்தாணிகளால் எண்ணங்களைச் சித்தரித்துச் சுட்டுவைத்துக்கொண்

டனர். இது கியூனிபாரம் எழுத்துமுறை என்று வழங்கப்படுகின்றது. எகிப்தியர்களின் ஹிரோகிளிபிக்ஸ் என்னும் முறை இதனின்றும் பெரிதும் மாறுபட்டுள்ளது.

எழுத்துக்களின் சரித்திரத்தில் 5000 வருஷங்களுக்குமுன்னதாகவே எகிப்தியர்கள், தனி எழுத்துக்கள் வகுக்க ஆரம்பித்தனர். அவர்கள் பிறகு, பதங்களுக்குச் சித்திரம் வரைவதை விட்டுவிட்டு, ஒலிகளுக்குத் தனித் தனி எழுத்துக்கள் வரைய ஆரம்பித்தனர். அவ்வொலிக் குறிப்புக்கள் ஒன்றுகூடிப் பதங்களைத் தெள்ளிதின் விளக்க ஆரம்பித்தன. எழுதுவதும் எளிதாயிற்று. இம்முறையையே இன்றும் உலகம் கையாண்டு வருகின்றது. இவைகள் வலப்புறத்திலிருந்து இடப்புறத்திற்கும், இடப்புறத்திலிருந்து வலப்புறத்திற்குமாக இருவகையாக எழுதப்பட்டன. பிறகு, முற்றத்துறந்த முனிவர்களினால், கலாஞானத்திற்கடிப்படையான இவ்வெழுத்தியல் வளர்க்கப்பட்டு வந்தது.

அறிஞர்களினால் இவ்வெழுத்தியல், அலிப், பே, அல்லது a-b என்னும் வரிசையான ஆக்ஸிடெண்டல் என்னும் மேற்றிசை முறையாகவும், அ-ஆ-இ-ஈ-வரிசையான ஓரியண்டல் என்னும் கீழ்த்திசை முறையாகவும் வகுக்கப்பட்டிருக்கிறது. கீழ்த்திசை முறையிலும் நம் நாட்டில், தமிழ் நீங்கிய பிறமொழிகள் அனைத்தும், வெவ்வேறு குறிகளைப் பெற்றிருப்பினும் ஆரிய ஒலிப்பிரிவுகளையே தாயகமாகக் கொண்டு மிளிர்கின்றன. நமது தமிழ் மொழியோ, ஆரிய ஒலிக்குறிப்புக்களையே பெரிதும் தழுவி வரினும், ற-ன-ழ-எ-ஒ-என்னும் புத்தொலிகளைக்கொண்டு, மெய்யெழுத்துக்களி

ஆுள்ள பல வொலிகளை வேண்டாதனவென்று தள்ளி வளர்கின்றது. இவ்வொலி முறை, போதிக்கப்பட்டு வருவதனாலே, பல்லாயிர வருஷங்களாகப் பிறழாது வருகின்றதென்பது நாம் காணக்கிடைக்கும் தொல்காப்பியம், நன்னூல் முதலிய பழைய இலக்கணங்களால் தெரிகின்றது.

இஃது இங்ஙனமாக நம் நாட்டிலுள்ள வரிவடிவின் விளக்கத்தை ஆராய்வோம். நம் முன்னோர் முதல் முதலில், எழுத்தாணி கொண்டு எழுதத்தெரிந்து கொள்வதன் முன், மூங்கில் மடல்களைத் திருத்தி ஒழுங்காக்கி, இறகினால் வருணங்கள் தோய்த்து சித்திரித்து எழுதினர். 'எழுத்து வருணம்' என்னும் சொற்கள் பழங்காலம் சித்திரம் எழுதும் வழக்கம் இருந்ததென்பதைப் புலப்படுத்தும். (எழுத்து—சித்திரம்; எழுத்துப்புடவை சித்திரப்புடவை) நெடுங்கணக்கு—ஓலைக்கணக்கு (நெடு—மூங்கில்; கணக்கு நூல்; ஓலை—பனையோலை; கணக்கு—நூல்) (மூடங்கல்—மூங்கில்; மடல்—பனையேடு; சுவடி பனையேட்டின் கண் சுவடுபடஎழுதுவது) என்னும் சொற்கள் பழங்காலத்தில் எழுதும் சாதனங்களைக்குறிக்கின்றன.

வடமொழிக்கவிஞராகிய காளிதாசர், ஓர் நாடகத்தில், ஊர்வசி புரூருவச் சக்கரவர்த்திக்கு பூர்சபத்திரத்தில் குங்குமம் பச்சைக்கற்பூரம் முதலியவற்றால் கூட்டப்பட்ட குழம்பினால் எழுதிச் சேதி தெரிவித்தனன் என்கின்றார். பூர்சபத்திரம் ஓர் மரத்தின் பட்டை; அது மஞ்சள் நிறகார்மடிபோன்றது. அபிரேகம்போல் பிளவுபடத்தக்கது. போகர் அதனைப் பூரபத்திரம் என்

பர். முற்காலத்தில் மூங்கில் மடற்சாசனங்கள் முச்ச லிக்கை எனவும், தாம்பிரசாசனங்கள் பட்டாபட்டயம் எனவும் வழங்கப்பட்டன.

இப்பொழுது நமக்கு மூங்கில் மடற்சாசனங்கள் கிடைக்காவிடினும், கோவிற்சுவர்களிலும் மலைப்பாறைகளிலும் வெட்டப்பட்டிருக்கின்ற அநேக கல்வெட்டுகளும் தாமிரப்பட்டயங்களும் ஆராயக்கிடைக்கின்றன. அவ்வெழுத்துக்கள் இன்றைய அச்செழுத்துக்களுக்குப் பெரிதும் மாறுபடுகின்றன. அவைகள் வட்டெழுத்துக்களாகவும், கோலெழுத்துக்களாகவும், சதுரெழுத்துக்களாகவும் அமைந்திருந்தன வரி என்பதற்கு வட்டெழுத்தென்பதே முதற்பொருள். அவ்வட்டவெழுத்துக்கள் விரைவு முதலிய காரணத்தால் கோலெழுத்தாயின. வட்டெழுத்தினும் கோலெழுத்தினும் சதுரெழுத்தெழுதல் கடினம். முடங்கலில் ஆணிகொண்டெழுதுதல் அதனினும் கடினம். இக்கடினமும் நெடுங்காலப்பயிற்சியால் எளிதுபட நடைபெறுகின்றது. திசைச்சொற்களாயமைந்துள்ள, தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழிகள் வட்டவடிவாயமைந்திருத்தலே தமிழின் பழைய வட்ட வடிவத்தை உணர்த்துகின்றது. இவ்வாறே தமிழின் உருவம் சில எழுத்துக்களில் மாற்றமடைந்திருக்கின்றது. இப்பொழுது வழக்கத்திலிருக்கும் அச்செழுத்துக்களை யமைத்த கிருஸ்து

வப் பாதிரிமார்கள் வெளியிட்டுள்ள பழைய விவிலிய கிரந்தத்தில் எவ்வளவு எழுத்துக்கள் இற்றைய நிலைமை யிலிருந்து எவ்வளவு மாறுபட்டிருந்தன வென்பது தெற் றென விளங்கும். சரித்திர ஞானமுள்ள எந்தத் தமிழ னும் இவ்வெழுத்துக்கள், இற்றைய நிலைமையிலே என் றும் சிரஞ்சீவியாக இருந்துவருகின்றன வென்று சொல் லத் துணியான்.

மொழிநூல் இயற்றிய மாகறல் கார்த்திகேய முதலி யாரவர்கள் ''முதல் முதல் அ-இ-உ என்பவை முறையே ஃ, %0-முறையே ஆகார, ஈகார, ஊகாரமாம். பிறகு ஈகாரம் ஈ இங்ஙனம் வேறுபட்டது. பிறவும் உணர்ந்து கொள்க'' என்று கூறுகின்றார்.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் ''புள்ளியில்லா வெல்லா மெய்யும்'' என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின் கீழ் கி, கீ முதலியனமேல் விலங்கு பெற்றன; கு கூ முதலியன கீழ் விலங்கு பெற்றன. கெ கே முதலியன கோடுபெற்றன. கா ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள் ளியை இக்காலத்தார் காலாக எழுதுவார். மகரத்திற்கு இரண்டு புள்ளியுள் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதி னர். கொ கோ ஙொ ஙோ முதலியன புள்ளியுங் கோடு முடன்பெற்றன வென்பர். இதனை, அறிஞர் யாழ்ப்பா ணம் ஆ. முத்துத்தம்பிப் புலவர் அவர்கள், விளக்கு மிடத்து,

| | பண்டை வடிவம் | இற்றைவடிவம் |
|---|---|---|
| புள்ளிபெறாதன | அ ஆ க ங | அ ஆ க ங |
| புள்ளிபெற்றன | எ ஒ க் ங் | எ ஒ க் ங் |
| மேல்விலங்கு பெற்றன | ஓி கி சி நீ | ஓி கி சி நீ |
| கீழ்விலங்கு பெற்றன | கு கூ | கு கூ |
| கோடுபெற்றன | lக lங | கே ஙே |
| புள்ளியும் கோடும்உடன்பெற்றன | iக iங | கெ ஙெ |
| கோடும் பக்கப்புள்ளியும்உடன்பெற்றன | lக. lங. | கோ ஙோ |
| புள்ளியும் கோடும் பக்கப் | ~~lக lங~~ | ~~கோ ஙோ~~ |
| புள்ளியும் உடன்பெற்றன | iக. iங. | கொ ஙொ |
| பக்கப்புள்ளி பெற்றன | க. ங. | கா ஙா |
| முன் இரட்டைப்புள்ளி பெற்றன | ..க ..ங | கை ஙை |
| பின் இரட்டைப் புள்ளி பெற்றன | iக.. iங.. | கௌ ஙௌ |
| மேலிரட்டைப் புள்ளி பெற்றன | ப். | ம் |

"மெய்யி னியற்கை புள்ளியோடு நிலையல்"

"எகர ஒகரத் தியற்கையு மற்றே"

"உட்பெறுபுள்ளி யுருவாகும்மே"(தொல்காப்பியம்)

என்னெனின் பகரத்தின் மகரத்தினிடை வரிவடிவு வேற்றுமை செய்தல் நூதலிற்று. புறத்துப்பெறும் புள்ளியொடு உள்ளாற் பெறும் புள்ளி மகரத்திற்கு வடிவாம். அஃதின்மை பகரத்திற்கு வடிவாம். ப் ப் எனக்கண்டு

கொள்க என்பர் உரையாசிரியர். மொழி நூலில், ஆசிரியர், "ம இது பத்தென்னும் எண்ணுப் பெயரின் வரிவடிவு. இக்காலத்து ய இங்ஙனம் சிறிது வேறுபட்டுள்ளது. அவ்வரிவடிவு பத்து என்பதின் முதலெழுத்தாதலின் அக்காலத்துப் பகரம், இக்காலத்து மகரம் போன்றிருந்ததென்பது விளங்குகின்றது. புறப்புள்ளியின்மை பகரத்திற்கு வடிவாம். இதில் உள் வளைந்திருத்தலின் உட்புள்ளி யென்றார். புறப்புள்ளியின்றேல் பகரத்திற்கும் மகரத்திற்கும் வேறுபாடின்மையின் 'உட்பெறு புள்ளியுருவாகும்மே' என்றனர். உரையாசிரியர் காலத்தும் அவ்வரிவடிவிருந்தமையின் அறிந்துரை கூறினர். உதாரணத்தைப் பிற்காலத்தார் அக்கால வழக்கப்படி வேறுபடுத்தினர் என்று கூறுகின்றார்.

இவ்வாற்றால், பிறமொழி யெழுத்துக்களைப்போன்றே நம் தமிழ் எழுத்துகளும் காலாந்தரத்தால் மாறுபட்டுக்கொண்டு வருகின்றதென்றும்—அங்ஙனம் மாறுபடுதல் நுண் நூற்புலவர்களால் ஆதரிக்கப்பட்டு வந்திருக்கின்றதென்பதும்,

"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல
கால வகையி னானே"

என்ற வாறு தள்ளாது கொள்ளத்தக்கதென்றே புலப்படுகின்றதல்லவா?

---

# தமிழ் எழுத்தில் திருத்தம்.

——)◯(——

(குமரன் 4—9—30)

தமிழ் எழுத்துக்கள் பயில்பவர்கட்குப் பலவித மான கஷ்டங்களிருக்கின்றன. அதைத் திருத்தவே

கூடாதென்று கூறுபவர்களொருபுறமிருக்கட்டும். திருத்தம் வேண்டுமென்று கருதுபவரும் பலரிருக்கின்றனரென்பதில் ஐயமில்லை. உயிரெழுத்துக்களிலும் உயிர்மெய் எழுத்துக்களிலும் ஒரே வரம்புக்குட்படுத்த முடியாமல் சிலச் சில எழுத்துக்கள் தடுத்து நிற்கின்றன. அ. என்னும் எழுத்தின் சார்பாக நீட்டி உச்சரிக்கும் ஆ. என்னும் எழுத்து ஒத்திருப்பதைக் காணலாம். குற்றெழுத்தான அ. விலிருந்து கீழே ஒரு சுழியைச் சுழித்தால் ஆ. வாகிவிடுகிறது. இப்படியே இ. என்னும் குற்றெழுத்தின் வடிவத்தை ஒரு சுழி சுழித்து நெட்டெழுத்தாக்காமல் ஈ. என்று வேறொருவிதமான எழுத்து அமைக்கப்படுகிறது. உ. என்னும் குற்றெழுத்தை நெட்டெழுத்தாக்கும்போது ஊ. என்று அதை ஒட்டியே திருத்தம் பெற்றாலும், அ. என்னும் குற்றெழுத்திலிருந்து நெட்டெழுத்தாக்கும் விதத்தைப் பின்பற்றி அமைக்கவில்லை. எ. என்னும் குற்றெழுத்து ஏ. என்று நெடிலாகும்போது மெதுவாக ஒரு கோடு கிழித்து அதிகப்படுத்தப்படுகிறது. ஒ என்னுங் குற்றெழுத்து நெட்டெழுத்தாகும் போது ஆ. என்னும் எழுத்தின் முறையைப் பின்பற்றி ஓ. என்று சுழியைப் பெறுகிறது. இவை ஒரு வரம்புக்கும் ஒழுங்குக்கும் கட்டுப்பட்டு அமைக்கப்பட்டிருக்குமானால் பயில்பவர்கட்குப் பெருஞ்சாதகமாக இருக்கும். மெய்யெழுத்தில் விசேஷ மாறுதல் வேண்டியதில்லை. அந்த எழுத்துக்கள் எல்லாம் புள்ளிபுள்ளனவாகவும், உயிர் மெய்யாகும்போது அதையொட்டி மயக்கமில்லாமலும் அமைந்திருக்கின்றன. உயிர்மெய் எழுத்தில் வரும்போது பல மாதிரியான மாறுபாடுகளிருக்கின்றன. கா. வரிசையை எடுத்துக்கொண்டால் சா, ஞா, டா, ஙா, என்று முறையே குற்றெழுத்துடன் 'கால்' சேர்ந்தால்

கெட்டெழுத்தாகும் என்ற விதிக்குக் கட்டுப்பட்டுச் செல்கிறது. ஆனால் அந்த வரிசையில் ஞு ஞு ரு என்னும் மூன்று எழுத்துக்கள் இந்த ஒழுங்குக்குக்குறுக்கே நின்று மறிக்கின்றன. இப்படியே கை, சை, ஞை, டை, என்று வரும் வரிசையில் ணை, னை, லை, ளை, என்ற நான்கெழுத்துக்கள் குறுக்கே நிற்கின்றன. கொ வரிசையில் ணொ, னொ, றொ என்னும் எழுத்துக்களும், வம்பு செய்கின்றன. இவைகளை முறையே ணா, னா, றா; ணை, னை, லை, ளை; ணொ, னொ, றொ; ணோ, னோ, றோ; என்று மாற்றினால் இந்த வரிசைகள் பயில்பவருக்கு வெகு சௌகரியமாக இருக்கும். இம்மாதிரியான திருத்தங்களால் அச்செழுத்துக்களில் பல குறைவடையும். இதைத்தவிர கு, கூ, வரிசையில் சில மாற்றங்கள் செய்யப்பட்டால் நலமாக இருக்கும்; அதைப் பிறிதொரு முறை எழுதுகிறேன். இத்திருத்தங்களைப் பற்றித் தமிழ் அபிமானிகளும், நூலாசிரியர்களும், பத்திரிகாசிரியர்களும் யோசித்துத் தங்கள் கருத்துக்களை வெளியிடும்படி வேண்டிக்கொள்கிறேன். சௌகரியமென்று தோன்றினால் அனுபவத்தில் கொண்டுவரவும் வேண்டுகிறேன்.

குறிப்பு:—இந்தத் திருத்தங்களில் உயிர்மெய் எழுத்துக்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் திருத்தங்களுடன் பரீக்ஷார்த்தமாக இவ்வாறாக் குமரன் மூன்றாம் பக்கக் கட்டுரை வெளியிடப்படுகிறது. அதைப்பற்றிய நேயர்களின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி வேண்டுகிறோம். பத்திரிகைகளிலும் நாவல்களிலும் முதலில் இம்முறைகள் கையாளப்படுமானால் விரைவில் வழக்கத்திற்கு வந்துவிடக்கூடும். (ஆசிரியர், குமரன்)

---

# தமிழ் எழுத்துத் திருத்தம்.

(குடி அரசு 20-1-35)

தமிழ் எழுத்துக்கள் விஷயமாய் பல சீர்திருத்தங்கள் செய்யப்படவேண்டும் என்பது அனேகருக்குள் வெகு காலத்திற்கு முன்பு இருந்தே ஏற்பட்டிருந்த அபிப்பிராயங்களாகும்.

தமிழ் எழுத்துக்களைப் பற்றி அழுக்கு மூட்டைப் பண்டிதர்கள் எவ்வளவு தத்துவார்த்தம் சொன்னாலும் அது எவ்வளவோ சீர்திருத்தமடையவேண்டும் என்பதில் நமக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

ஒரு பாஷையோ, ஒரு வடிவமோ, அல்லது வேறு பல விஷயமோ எவ்வளவு பழையது, தெய்வீகத்தன்மை கொண்டது என்று சொல்லிக் கொள்ளுகின்றோமோ, அவ்வளவுக்கவ்வளவு அவற்றில் சீர்திருத்தவேண்டிய அவசியமிருக்கின்றது என்பது அதன் உண்மைத் தத்துவமாகும்.

உதாரணமாக நெருப்புக்கு சுமார் நூறாயிரம், பதினாயிரம் வருஷங்களுக்கு முந்தி சக்கிமுக்கி கல்லுகள் தான் ஏற்படுத்தப்பட்டிருந்தன.

இது ஒரு "கடவுளால்" ஆதியில் பொதிகை மலையில் இருந்தோ, கைலாச மலையிலிருந்தோ கண்டுபிடிக்கப்பட்டதாகவோ, உபதேசிக்கப்பட்டதாகவோ இருக்கலாம். ஆனால் இன்று நெருப்புக்கு ஒரு பொத்தானை

அழுத்துவதோ, ஒரு முளையை திருப்புவதோ ஆகிய காரியத்தில் வந்துவிட்டது.

இதுபோலவே பஞ்சபூதங்களிலும் அவைகள் உற்பத்தி, சேர்க்கை, அனுபவம் ஆகியவைகளிலும் நாளுக்கு நாள் எவ்வளவு சீர்திருத்தங்கள் செய்யப்பட்டு வருகின்றன என்பதும் இன்னும் எவ்வளவு செய்யவேண்டியதிருக்கின்றன என்று மக்கள் கருதுகிறார்கள் என்பதும் தெரிந்தால் கேவலம் ஒரு புராதன பாஷையின் எழுத்துக்கள் என்பதில் எவ்வளவு சீர்திருத்தம் அவசியமிருக்கும், அல்லது செய்யக்கூடும் என்பது தானாய் விளங்கும்.

சாதாரணமாய் 500-வருஷத்திற்கு முந்தி இருந்த மக்களின் அறிவுக்கும், அவர்களின் வாழ்க்கை சௌகரியத்திற்கும் இன்று இருக்கும் மக்களின் அறிவுக்கும், வாழ்க்கை அவசியத்துக்கும் எவ்வளவோ மாறுதலும், முற்போக்கும் இருந்து வருகின்றன என்பதை யாரும் மறுக்கமுடியாது.

இதனால் பூர்வீக மக்களை மடையர்கள் என்றே சொல்லி ஆகவேண்டும் என்பதாக நாம் சொல்லவரவில்லை. ஆனால் பூர்வீக மக்கள் என்பவர்கள் விஷயங்களையும், ஞானங்களையும் அல்லது திருத்தங்களையும் எவ்வளவு தூரத்தில் கொண்டுவந்து விட்டுப் போனார்களோ அதிலிருந்தே அதற்குப் பிற்காலத்து மக்கள் அவ்விஷயங்களைக் கொண்டுவந்து விட்டுப்போக முடிந்தது.

அதுபோலவே இப்போதும் அதிலிருந்தே ஆரம்பிக்கின்றபடியால், அது இன்னும் விசேஷமான மாறுதல்

களாக முடிகின்றது. எனவே இன்னும் ஒரு 100 ஆண்டு அல்லது 500 ஆண்டுகள் சென்றால் இன்றைய நிலையில் இருந்து இன்னமும் எவ்வளவோ தூரம் மாற்றமடைந்த முன்னேற்றங்கள் என்பவைகள் ஏற்படலாம். அதனால் இந்த நூற்றாண்டு மக்களை காட்டுமிராண்டிப் பிராயமுள்ள மக்கள் என்று கூட சொல்லும்படி ஏற்பட்டாலும் ஏற்படலாம். அதற்காகவேண்டி இன்னமும் ஐநூறு வருஷத்திற்குப்பின் எப்படி இருக்கவேண்டி வரும் என்று கருதி இப்பொழுதே கண்டுபிடித்து விட முடியாது

முன்னேற்றம், மாறுதல் என்பவைகள் காலதேச வர்த்தமானத்தையும், அன்றுள்ள அறிவு விருத்தியையும் பொருத்ததே யொழிய, மதவெறியர்கள் சொல்லுவது போன்ற தீர்க்கதரிசனத்தைப் பொருத்ததல்ல என்பதே நமது அபிப்பிராயம். முக்காலத்துக்கு ஏற்ற தீர்க்கதரிசனம் என்பது ஆராய்ச்சி அற்ற அறிவீனர்களின் வசனமேயாகும். 'விபூதி வைத்துக்கொள்வதற்காக கடவுள் மனிதனுக்கு நெற்றியை நீளவசத்தில் மூன்று விரல் உயரத்தில் 6-அங்குல அகலத்தில் ஏற்படுத்தினார்' என்று சொல்லுவது எவ்வளவு தீர்க்கதரிசனமும், தத்துவார்த்தமும் கொண்டதோ அதுபோல்தான் முக்கால தீர்க்கதரிசனமும், ஆகும். ஆதலால் உலக விஷயங்களில் மனித சமூக வாழ்க்கை சம்பந்தப்பட்டவைகளில் தீர்க்கதரிசினத்தையும், தெய்வீக தத்துவார்த்தங்களையும் கொண்டு வந்து கலக்கிக்கொண்டு குரங்குப்பிடியாய்ப் பழமையையே கட்டிக்கொண்டு எழுதுவதினாலோ, அல்லது மாறுதல்கள் வரும்போதெல்லாம் சீறி விழுந்து கோபிப்பதினாலோ யாதொரு பிரயோஜனமும் ஏற்பட்டு

விடாது என்பதோடு அது சாத்தியப்படக்கூடியது என்றும் சொல்லமுடியாது.

பழையதை மாற்றக்கூடாது என்பதும் பழயவைகள் எல்லாம் தெய்வாம்சத்தால் ஏற்பட்டதென்பதும் பழைய செய்கைகளோ, பழைய தத்துவங்களோ, பழைய மாதிரிகளோ, பழைய உபதேசங்களோ முக்காலத்துக்கும், முடிவு காலம்வரைக்கும் இருப்பதற்கும், பின்பற்றுவதற்கும், தகுதியான தீர்க்கதரிசனத்துடன் தெய்வீகத் தன்மையில் ஏற்பட்டது, என்று சொல்லப்படுமானால் அவைகளை மத வெறியர்களுக்கும் பழமையால் பிழைக்கக்காத்துக்கொண்டிருக்கும் சோம்பேறி சுயகலக்கூட்டங்களுக்கும் விட்டுவிடவேண்டுமே ஒழிய அவற்றைப் பொது ஜன சாதாரண நித்திய வாழ்க்கையில் கொண்டுவந்து கலக்கி முற்போக்குக்கும், சௌகரியத்துக்கும் தொல்லை விளைவிக்கக்கூடாது.

எவ்வளவு மதவெறியனும், குரங்குப் பிடிவாதக் காரனும் இன்றைய வாழ்க்கையில் மாற்றமடைந்து கொண்டும் மாற்றத்தை ஏற்றுக்கொண்டும்தான் இங்கு வாழ்ந்துவருகிறானேயொழிய எவனும் தெய்வீகத்துக்கு மாறுபட்டதென்று கருதி எதையும் விட்டுவிட்டு காட்டுக்கு ஓடிப்போகவில்லை. அல்லது தற்கொலை செய்து கொண்டு "ஆண்டவனை" அடைந்துவிடவுமில்லை.

ஆகையால் மாறுதலைக்கண்டு அஞ்சாமல் அறிவுடைமையோடும், ஆண்மையோடும் நின்று விஷயங்களை நன்றாய் ஆராய்ச்சி செய்து காலத்துக்கும், அவசியத்துக்கும் தக்கவண்ணம் தள்ளுவன தள்ளி கூட்டுவன கூட்டித் திருத்தம் செய்யவேண்டியது பகுத்தறிவு

கொண்டவன் என்னும் மனிதனின் இன்றியமையாத கடமையாகும்.

அனேகர் இதை உணர்ந்திருந்தாலும் அதன் பயனாய் இன்றைய தமிழ் எழுத்துக்களில் செய்யப்பட வேண்டிய மாற்றங்கள் பல என்பதைப் பற்றி பலருக்கு அபிப்பிராயம் இருந்தாலும் எவரும் தைரியமாய் முன் வராமலே இருக்கிறார்கள். ''இவ்வளவு பெரிய காரியத்திற்கு, பாஷை ஞானம், பொதுக்கல்வி இல்லாத ஒரு சாதாரண மனிதன் முயற்சிக்கலாமா'' என்பது ஒரு பெரிய கேள்வியாக இருக்கலாம். அது உண்மையாகவும் இருக்கலாம். ஆனால் தகுந்த புலமையும், பாஷா ஞானமும் இலக்கண அறிவும் உள்ளவர்கள் எவரும் முயற்சிக்கா விட்டால் என் செய்வது? தவம் செய்வதா? அல்லது ஜபம் செய்வதா?

தமிழ் ஏற்பட்டது இன்று நேற்றல்ல. எழுத்துக்கள் ஏற்பட்டது இன்று நேற்றல்ல. ஆனால் எழுத்துக்கள் கல்லிலும், ஓலையிலும் எழுதுங்காலம் போய் காகிதத்தில் எழுதவும், அச்சில் வார்த்துக் கோர்க்கவும் ஏற்பட்ட காலம் தொட்டு இன்று வரை அவற்றில் யாதொரு மாற்றமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆதலால் யாராவது ஒருவர் துணிந்து இறங்கவேண்டியதாயிற்று.

புதிய மாறுதல்களால் அதாவது போக்குவரத்து வசதியின் காரணத்தால் ஏற்பட்ட பல தேச மக்கள் கூட்டுறவாலும், பல தேச பாஷைச்சொற்களும் பலதேசப் பொருள்களும் கலக்கும்படி ஏற்பட்ட சம்பவங்களாலும் இன்று அனேக வார்த்தைகள், உச்சரிப்புகள் தமிழில் சர்வ சாதாரணமாய்க் கலந்துவிட்டன. அவைகளை உச்

சரிக்கும்போதும், எழுதும்போதும் தமிழ்ப் பாஷையும் தமிழ் எழுத்துக்களும் விகாரமாய் வெட்கப்படவேண்டி இருக்கிற தன்மையில் இழிவுறுகின்றன. (அதற்கு தத்து வார்த்தமும், விதியும் இருக்கலாம்.) ஆதலால் சில எழுத் துக்கள் வேறு பாஷைகளில் இருந்து எடுத்துக்கொள்ள வேண்டியதுகூட மிக அவசியமாகின்றன. அதற்கு வெட் கமாய் இருக்கும் பக்ஷம் புதியதாகவாவது எழுத்துக் களை உண்டாக்கிக் கொள்ளவேண்டும்.

இவைகள் ஒருபுறமிருக்க இப்போது உயிர் மெய் எழுத்துக்கள் என்று சொல்லப்படும் 18 எழுத்துக்களி லும் ஒவ்வொன்றுக்கும் உள்ள இ, கரம் ஈ காரம், உ, கரம் ஊ காரம் ஆகிய நான்கு சப்தங்கள் கலந்த எழுத் துக்கள் தனித்தனி வடிவம் கொண்டு அதாவது கி. கீ. கு. கூ. என்பது மாதிரியே 18 எழுத்துக்களும் தனித் தனி உருவம் பெற்று 18×4=72 எழுத்துக்கள் அதிக மாக அனாவசியமாக இருந்து வருகின்றன.

இந்தத் தனித்தனி வடிவங்கள் எதற்காக இருக்க வேண்டும்? எல்லா உயிர்மெய் எழுத்துக்களுக்கும் ஆ, காரம், எ, கர்ரம், ஆகிய சப்தங்களுக்கு ா, ெ, ஆகிய குறிப்புகளைச் சேர்த்து எப்படி கா. கே. என்று ஆக்கிக் கொள்ளுகின்றோமோ அது போலவே மேல்கண்ட கி. கீ. கு கூ. முதலிய சப்தங்களுக்கும் ஒரு தனிப்பட்ட குறிப்பு அடையாளத்தை ஏன் சேர்த்துக்கொள்ளக்கூ டாது என்பது மிகவும் யோசிக்கத்தக்க விஷயமாகும்.

உதாரணமாக ஜ. ஷ. முதலிய கிரந்த அக்ஷரங்கள் என்று சொல்லப்படுபவைகளுக்கு இன்றும் உ, கரம்

ஊ, காரம் சப்தங்களுக்கு கு. கூ. என்கின்ற மாதிரி தனி எழுத்துக்கள் இல்லாமல் உ, கரத்துக்கு "ு" இந்தமாதிரி குறிப்புகளையும் ஊ, காரத்திற்கு "ூ" இந்தமாதிரிகுறிப்புகளையும் சேர்த்து ஜு, ஜூ, ஷு, ஷூ, ஸு, ஸூ, ஹு, ஹூ என்பதாக ஏற்படுத்தி இருக்கிறார்கள். அது போல் தமிழ் எழுத்துக்களிலும் கி. கீ. கு. கூ. ஆகியவைகளுக்கு ு, ூ என்பதுபோன்றவைகளையோ அல்லது வேறுவிதமான குறிப்புகளையோ சேர்த்தால் அச்சில் 72 தனி எழுத்துக்கள் தேவையில்லை என்பதோடு பிள்ளைகள் தமிழ் கற்பதற்கும் 72 எழுத்துக்களைத் தனியாக ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லாத சௌகரியமும் ஏற்படும்.

மற்றும் எழுத்துக்குறைவால் அச்சுக்கோர்ப்பதில் சௌகரியம் ஏற்படுவது போலவே தமிழ் எழுத்து டைப் ரயிட்டிங்கி என்று அச்சடிக்கும் யந்திரம் செய்வதிலும் மிகுந்த சௌகரியமும், விலை சகாயமாய் செய்யக்கூடிய நிலைமையும் ஏற்படும்.

எழுத்துக்கள் உருவம் மாற்றுவது, குறிப்புகள் ஏற்படுத்துவது புதிய எழுத்துக்களைச் சேர்ப்பது, என்பது போலவே சில எழுத்துக்களை அதாவது அவசியமில்லாத எழுத்துக்களைக் குறைக்கவேண்டியதும் அவசியமாகும்.

உதாரணமாக உயிரெழுத்துக்கள் என்பவைகளில் ஐ., ஔ. என்கின்ற இரண்டு எழுத்துக்களும் தமிழ்ப் பாஷைக்கு அவசியமில்லை என்பதே நமது வெகு நாளைய அபிப்பிராயமாகும். ஐ காரம் வேண்டிய எழுத்

துகளுக்கு "ை" இந்த அடையாளத்தைச் சேர்ப்பதற்கு பதிலாக, ய் என்ற எழுத்தை பின்னால் சேர்த்துக்கொண்டால் ஐகார சப்தம் தானாகவே வந்து விடுகின்றது. உதாரணமாக கய் என்று எழுதினால் "கை" என்பதின் சப்தம் மாறுவதில்லை என்பது விளங்கும்.

அதுபோலவே ஔ, காரத்துக்கும், கௌ என்பதற்கும் பதிலாக கவ் என்றோ, கவு என்றோ, எழுதினால் சப்தம் மாறுவதில்லை. கௌமதி—கவ்மதி கவுமதி என்கின்ற சப்தங்கள் ஒன்று போலவே உச்சரிப்பதைக் காணலாம்.

இந்த வகையில் ஐ. ஔ என்ற இரண்டு எழுத்துக்கள் உயிரெழுத்திலேயே குறைத்து விட்டால் அதனாலும் பெரிதும் அனுகூலம் உண்டு.

ஆகவே கி. கீ. கு. கூ. என்கின்ற சப்தங்களுக்கு தனிக்குறிப்பு வடிவங்கள் ஏற்படுத்துவதன் மூலம் குறிப்புகள் அதிகமானாலும் ஒ. ஔ. குறிப்புகள் குறைபடுவதன் மூலம் கிட்டத்தட்ட சரிபட்டுப்போக இடமேற்படும். கையெழுத்து எழுதுவதற்கும் அசௌகரியமிருக்காது.

தமிழ் எழுத்துக்களில் மேலே குறிப்பிட்ட இந்தப் படியான சீர்திருத்தங்களெல்லாம் செய்யப்படுமானால் அப்போது தமிழில் மொத்த எழுத்துக்கள் 46-ம் 7-குறிப்பு எழுத்துக்களும் ஆக 53 எழுத்துக்களில் தமிழ்ப் பாஷை முழுவதும் அடங்கி விடும்.

அதாவது உயிர் எழுத்து 10, உயிர்மெய் எழுத்து 18, ஒற்றெழுத்து 19 எழுத்துக்களின் குறிப்புகள் (அதா

வது ா, ை, ி, ெ, ே, இதுகள் போல்) 7 ஆக மொத்தம் 54 எழுத்துக்களுக்குள் அடங்கிவிடும்.

அச்சுக்கும் 54 அரைகள் (கேஸ்கள்) இருந்தால் போதுமானதாகும். பிள்ளைகளுக்கும் இந்த 54 எழுத்துக்கள் ஞாபகமிருந்தால் போதுமானதாகும்.

ஜ, ஸ, ஷ, ஹ, க்ஷ, என்கின்ற கிரந்த அக்ஷரங்களான எழுத்துக்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டுமானால் அதில் குற்றெழுத்து உள்பட ஒரு பத்து எழுத்து அதிகமாகி 64 எழுத்துக்களாகலாம்.

ஆனால் இப்பொழுதோ ஷை 64 எழுத்துகளுக்குப் பதிலாக சுமார் 150-க்கு மேல் 160 எழுத்துக்கள் வரை இருந்து வருகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்,

பாஷையின் பெருமையும், எழுத்துக்களின் மேன்மையும், அவை சுலபத்தில் தெரிந்துகொள்ளக் கூடியதாகவும், கற்றுக்கொள்ளக்கூடியதாகவும் இருப்பதைப் பொருத்ததே யொழிய வேறல்ல. ஆதலால் இந்த மாற்றங்கள் நாளாவட்டத்தில் செய்யக்கூடியது என்று சொல்லுவதானாலும் ண. ணை முதலிய 7 எழுத்துக்களைப் பொருத்தவரையில் உள்ள மாற்றத்தை வாசகர்கள் இப்போது முதலே அனுமதிப்பார்கள் என்றே கருதுகின்றோம். ("குடி அரசு")

முற்றிற்று.

---

# குடி அரசு பதிப்பக வெளியீடுகள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | [illegible] றபாடுகள் | 0 | 8 | 0 |
| 2. | [illegible], மதமும் | 0 | 4 | 0 |
| 3. | பொதுவுடைமைத் தத்துவங்கள் | 0 | 3 | 0 |
| 4. | கடவுளும், பிரபஞ்சமும் | 0 | 4 | 0 |
| 5. | கைவல்யம் அல்லது கலிக்கியாணம் | 0 | 8 | 0 |
| | (இது சுவாமி கைவல்யம் அவர்களால் எழுதப்பட்டது) | | | |
| 6. | இராமாயண ஆராய்ச்சி பாலகாண்டம் | 0 | 4 | 0 |
| 7. | ,, ஆயோத்தியாகாண்டம் | 0 | 8 | 0 |
| 8. | ஞானசூரியன் | 0 | 5 | 0 |
| 9. | தர்ம பரீக்ஷை அல்லது புராண ஆபாசம் | 0 | 3 | 0 |
| 10. | மேயோ கூற்று மெய்யா? பொய்யா? | 0 | 3 | 0 |
| 11. | பங்கஜம் அல்லது பார்ப்பனக்கொடுமை | 0 | 4 | 0 |
| 12. | ஈ.வெ.ரா. சீர்திருத்தமகாநாட்டு உபன்யாசம் | 0 | 2 | 0 |
| 13. | அகத்தியர் ஆராய்ச்சி | 0 | 2 | 0 |
| 14. | இராமலிங்க சுவாமிகள் பாடல் திரட்டு | 0 | 2 | 0 |
| 15. | சுயமரியாதைப்பாடல் | 0 | 2 | 0 |
| 16. | கதர் மூட நம்பிக்கை (இங்கிலீஷ்) | 0 | 2 | 0 |
| 17. | சுயமரியாதைத் தாலாட்டு | 0 | 2 | [illegible] |
| 18. | பர்னாட்ஷா உபந்யாசம் | 0 | 1 | [illegible] |
| 19. | சோஷியலிசம் | 0 | 2 | 0 |
| 20. | போல்ஷ்விக் முறை | 0 | 1 | 0 |
| 21. | ஈ. வெ. ரா. இலங்கை உபந்யாசம் | 0 | 0 | 9 |
| 22. | கத்தோலிக்கர் வீண் கூச்சல் | 0 | 0 | 6 |
| 23. | சமதர்ம உபந்யாசம் | 0 | 0 | 6 |
| 24. | சோதிடப்புரட்டு | 0 | 2 | 0 |
| 25 | மனுநீதி விளக்கம் | 0 | 2 | 0 |
| 26. | மறுப்புக்கு மறுப்பு | 0 | 3 | 0 |

கிடைக்குமிடம்:—

"குடி அரசு" பதிப்பகம், ஈரோடு.